உ

முருகன் துணை

குருபாத தாசர்

இயற்றிய

# குமரேச சதகம்

பாட்டும் குறிப்பும்


பதிப்பாசிரியர் :

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்

மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்கள்



வெளியிடுவோர் :

வாவிள்ள

இராமசாமி சாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்

292, எஸ்பிளனேட், சென்னை.


---




[அக்ஷய வைகாசி

கடவுள் துணை

# பதிப்புரை



வட மொழியிலும் தெலுங்கிலு முள்ள சிறந்த நூல்களைச் சென்ற எழுபது ஆண்டுகளாக ஒழுங்காக அச்சிட்டுக் கொண்டு வருகின்றோம். எமது முயற்சியின் பயனாக இவ்விரு மொழிகளிலும் சிறந்து விளங்கும் அரிய பழைய நூல்களும் புதிய நூல்களும் அச்சிடப்பட்டு எல்லாருக்கும் எளிதிலே பயன்பட்டு வருகின்றன. இத்தகைய எமது முயற்சியினால் ஏறக்குறைய எல்லா நூல்களும் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிடப்பட்டு யாவராலும் போற்றப்பட்டு வருகின்றன.

தமிழ் மொழியில் விளங்குகின்ற சங்க நூல்கள் தமிழர் எண்ணங்களையும், கல்வி அறிவு நுட்பங்களையும், நாகரிக இயல்புகளையும் இனிது விளக்குதலின் அவற்றைத் தமிழ் நாட்டில் வாழும் ஒவ்வொருவரும் அறிய வேண்டுவது கடமையாகும். இக்கருத்துக் கிணங்கத் தமிழ் நூல்கள் எல்லாவற்றையும் உயர்ந்த பதிப்புக்களாக அச்சிட எண்ணி ஒருதனி அச்சுக்கூடத்தை அதற்கெனவே வரையறுத்து வைத்துள்ளோம். இது நாளடைவில் வளர்ச்சியுறுமென நம்புகிறோம்.

தமிழில் நிறைந்த புலமையுடைய அறிஞர்களைக் கொண்டு ஒவ்வொரு புத்தகத்துக்கும் குறிப்புரை, முக வுரை, பாடபேதம் முதலியவற்றைச் செவ்வையாக எழுது வித்துத் தருந்த முறையில் அச்சிட்டு வெளியிடுதலும், ஆங்கிலம் அறியாத தமிழ் மக்கள் இனிது உணர்ந்து பய னடையுமாறு கதை, பௌதிக சாத்திரம், இரசாயன சாத் திரம், தத்துவ சாத்திரம், தேசீய சாத்திரம, பொருள் நூல் முதலியவற்றைத் தக்கவர்களைக்கொண்டு நன்கு மொழி பெயர்த்து அழகிய உரை நடையில் ஆராய்ந்து எழுதுவித்து வெளியிடுதலும் எமது நோக்கங்களாகும்.

இவ் வகையில் இடம், பொருள், ஏவல் கிடையாமை யினுல் இதுவரையில் வெளிப்படா திருக்கும் அறிவு ஆராய்ச்சி நுட்பங்கள் இதனுல் வெளிவர இடம்பெறு மாயின் எமது முயற்சி பயனடைந்ததெனை எண்ணி மகிழ்வோம். தமிழகத்தார் எமது முயற்சி இனிது முடியு மாறு உதவிசெய்ய வேண்டுமென எல்லாம் வல்ல இறை வன் திருவருளை இறைஞ்சுகின்றோம்.

உடனே வெளிவரும் எமது பதிப்புக்கள் :

சதகங்கள்

1. அறப்பளீசுர சதகம்
2. நாராயண சதகம்
3. கோவிந்த சதகம்
4. தண்டலையார் சதகம்

பாராயண நூல்கள்

1. திருமுருகாற்றுப்படை
2. கந்தரனுபூதி
3. கந்தர் கலிவெண்பா
4. விநாயகர் அகவல்
5. சரசுவதி அந்தாதி

6. அபிராமி அந்தாதி
7. சிவானந்த லகரி
8. சௌந்தரிய லகரி
9. இலக்குமி தோத்திரம்
10. நால்வர் நான்மணிமாலை

## நீதி நூல்கள்

1. திருக்குறள்
2. நாலடியார்
3. நீதி நெறி விளக்கம்
4. ஆசாரக் கோவை

## திருக்குறள் விளக்கநூல்கள்

1. சிவசிவ வெண்பா
2. சோமேச வெண்பா
3. இரங்கேச வெண்பா
4. ஆத்திசூடி வெண்பா
5. திருத்தொண்டர்வெண்பா

## திரட்டு நூல்கள்

1 அருட்பா
2. தேவாரம்
3 திருப்புகழ்
4. பட்டினத்தார் பாடல்
5 தாயுமானவர் பாடல்

## வசன நூல்கள்

1 மனுமுறை கண்ட வாசகம்
2 சீவகாருண்ய ஒழுக்கம்
3 பஞ்ச தந்திரம்
4 கதாமஞ்சரி
5 விநோதரச மஞ்சரி

## இலக்கணமும் நிகண்டும்

1. நன்னூல்
2 நேமிநாதம்
3. புறப்பொருள்வெண்பாமாலை
4 பதினோராவது நிகண்டு
5. திவாகரம்

வாவிள்ள இராமசாமி சாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்.

# முகவுரை

குமரேசனை முன்னிலைப்படுத்திப் பாடிய நூறு செய்யுள் ஆதலின், இதற்குக் 'குமரேச சதகம்' என ஆசிரியர் பெயர் புனைந்தனர். பாட்டுக்களின் மகுடத்தைக் காண்க; இரண்டாம வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகை. குமார + ஈ ய—குமாரேயஎன்றாகிக் குமரேசன் எனத் தமிழில் திரிந்தது. குமார + ஈய—குமாரேய எனப் புணர்ந்தது வடமொழிக் குணசந்தி. சதகம்-நூறு பாட்டால் ஆகிய நூல், சதகம்-நூறு. இது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. 'விளையுமொரு பொருள்மேல் ஒரு நூறு தழைய உரைத்தல் சதகம் என்ப' என்பது இலக்கண விளக்கம்.

இந் நூற்பயன் இன்ன தென்பதை நூலாசிரியரே இதன் இறுதிக்கட் கூறிய

'பன்னரிய புல்வயலில் வாழ்குமரேசர்மேல்
பரிந்து குருபாத தாசன்
பாங்கான தமிழாசிரியவிருத் தத்தின்அறை
பாடல்ஒரு நூறும் நாடி
நன்னயமதாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்ற பேர்கள்
ஞானயோகம் பெறுவர் பதவியாவும்பெறுவர்
நன்முத்தி யும்பெறுவரே'

என்னும் செய்யுளால் அறிக. இதுபோல் தமிழில் பல சதகங்கள் உள. அவை : அறப்பளீசுர சதகம், தண்டலை யார் சதகம், கோவிந்த சதகம் முதலியன. இதனை ஆக்கியோர் குருபாத தாசர் என்பவர்.

## குருபாததாசர் வரலாறு

இவர் சோழநாட்டிற் புதுக்கோட்டையைச் சார்ந்த புல்வயல் என்னுமூரில் பரம்பரைச் சைவவேளாளர் குலத்திற் பிறந்து, கல்வி கேள்விகளிற் சிறந்து, அவ்வூரின் மலைமீது திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் குமரேசன் திருவடிகளில உண்மை யன்புடையவரா யிருந்தனர்.

இவர் புதல்வர் பரம்பரையோர் மேற்குறித்த புல்வயலென்னும் ஊரிலும், புதல்வி பரமபரையோர் சேலத்தைச் சார்ந்த சார்வாய் என்னுமூரிலும் உளரென்ப. தமிழிலக்கண இலக்கியங்களிற் சிறந்த புலமை வாய்ந்து பிற்காலத்து ஆசுகவிப்புலவராய் விளங்கிய கதிரைவேற் கவிராய ரென்பார், இவரது புதல்வி பரம்பரையைச் சேர்ந்தவராவர். கடம்பர் கோவில் மதுரநாயகம் பிள்ளை என்னும் புலவரும் இப்பரம்பரையைச் சார்ந்தவரென்றே கூறுப.

இவரது இயற்பெயர் முத்து மீனாட்சிக் கவிராயர் என்றும், இச்சதகம் ஒன்றேயன்றி இன்னுஞ் சில நூற்களையும் இவர் இயற்றியுள்ளா ரென்றும் சிலர் கூறுகின்றனர். இவருடைய இயற்பெயர் மாறியதற்கும் பிறவற்றிற்கும் தக்க காரணங்கள் புலப்படவில்லை.

புல்வயலென்னும் இச்சதகம் பெற்ற தலம் சோழ நாட்டின் கண்ணதா மென்பதை 'வானாடு புகழுமொரு சோனாடு

தழைய இவண் வந்தவதரித்த முதலே' என்றும், 'மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ மருவுசோணுட் டதிபனே' என்றும், 'மாடமிசை அனனக்கொடித்திரள் கோள் சோணுடு வாழவந்திடு முதல்வனே' என்றும் இச்சதகத்துள் வருவன வற்று லறியலாம்.

இவர் முருகப்பெருமானிடத்து மிக்க அன்புடையா ரென்பது இச்சதகம் இயற்றியவதனுலும் 'எற்குமாருதுன் மீது நினைவு' என்று அவரே கூறுமாற்ருனும் நன்கு விளங் கும்.

இவர், (59) 'மாற்றிச் சுரத்தினை விபூதியா லுடல் குளிர வைத்த மெய்ஞ்ஞான முதலே' என்றும், (61) 'மைந்தனென அனறுஉமை முலைப்பால் கோடுத்திட வளர்ந்தருள் குழந்தை வடிவே' என்றும் திருஞான சம்பந்தப் பெருமானது அருட்டிறங்களை எடுத்துப் போற்றுவதால், தஞ் சமயபர மாசாரியரிடத்து அன்பு மிக உடையரென்பது விளங்கு கின்றது. (24) 'வேதாகமஞ் சிவ புராணமவை கேளாமல் விட்டசேவி என்ன சேவிகள்' என்றும், (34) 'புராணிகர்க் கோன்று முதவாத லோபியர்கள்' என்றும், (58) 'கற்ற வோரு வித்துவானைக் கல்விப்பிரசங்கத்திறு லறியலாம்' என் றும கூறுமாற்ருல், சிவபுராண படனத்து மிக்க விருப்ப முடையாரென்பதும், விபூதி வாங்கு முறையையும், அதைத் தரிக்கு முறையையும மிகவும் பாராட்டிக் கூறி, அங்ஙனம் விதிவழுவாது விபூதி யணிவோரைச் 'சத்தியுஞ் சிவமேன்ன லாம்' (87) எனப் போற்றுமாற்ருல் திருநீற்றி னிடத்து மிக்க அன்புடையரென்பதும விளங்குகின்றது.

இவர் " அவ்வவ் வினத்தி லுயர்ந்தவை" என்று தலைக் குறியிட்டுப் பாடியதில், மொழியைக் குறிக்குமிடத்து

வேறு பிறமொழிகளைக் கூறாமல் தமிழ் மொழியையே எடுத்துத் 'தமிழினிலகத்தியம்' என்று முத்தமிழ் விரவிய முழுமுதல் நூலாம் அகத்தியத்தையே குறித்தமையானும் பிறவிடங்களினும் தமிழைக் குறிக்குமிடத்து 'மங்காத செந்தமிழ்' என அடைகொடுத்து ஓதுதலானும் தமிழ் மொழியின்கண் இவர் மிக்க அன்புடையா ரென்று அறியலாம்.

"இதற்கிது உறுதி" என்ற விடத்துக் 'கவிக்குறுதி பொருளடக்கம்' எனக் கூறியவர் "பாடலியல்பு" கூறுமிடத்து(68) 'அழுத்தமிகு குறளினுக் கோப்பாகவே பொருளடக்கமுமிருக்கவேண்டும்' எனக் கூறுமதனால் தெய்வத் திருக்குறளிடத் திவர்தமக் கிருந்த மதிப்பு நன்கு விளங்கும்.

இவர் ஆத்திசூடி, மூதுரை முதலிய சிறு நூற்களால் பெரிதும் கவரப்பெற்ற மனமுடையவராய் அவையின் அருமையை மாணாக்கர் அறியும்பொருட்டும், அந்நூற்கள் கற்று முற்றிய பின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்னு மியையை அறிவுறுத்தற் பொருட்டும், 'முன்னோர் மொழி பொருளே யன்றியவர் மொழியும்பொன்னேபோற் போற்றுவம்' என்பது உணர்த்தற் பொருட்டும், ஓதுவிக்கு முறைப்படி முன்னர்க் கற்றதைப் பின்னர் நினைவூட்டற் பொருட்டும் (70) 'சேரிடமறிந்து சேரென்றௌவை சொன்ன கதை பொய்யல்லவே' என்றும், 'சடலுகுள் நாழியை யமுக்கியே மொண்டிடிற் காணுமோ நானாழிதான்' என்றும், (66) 'கனபாரமேற்றிற் பிளந்திடுவ தன்றியே கற்றூண் வளைந்திடாது' என்றும் தம் நூலகத்து ஆங்காங்கே பெய்தமைப் பாராயினர்.

இவர் 'கரிவாலைவிட்டு நரிவாலைப் பற்றி' என்றும், (64) 'ஐங்காதம் ஓடினும் தன்வினைகள் தன்னோடே யடையாமல்

நீங்கிவிடுமோ' என்றும் ஆண்டாண்டுப் பல பழமொழிகளை யும் பெய்துரைப்பதோடு (78) "சிங்கத்தையும் பெரிய ரிஷ. பத்தையும் பகைமை செய்ததோரு நரியல்லவோ' என்பது போன்ற பஞ்சதந்திரம் முதலியவற்றிலுள்ள கதைகளையும் ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

'அன்னை தந் தையர்புத்தி கேளாத பிள்ளையோ
அஷ்டமச் சனியாகு வான்
அஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்கில்
அங்கார கச்சன்ம மாம
தன்னைமிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளா அடிமை
சந்திராஷ் டகமென்ன லாந்
தன்பங்கு தாஎன்று சபையேறு தம்பியோ
சார்ந்தசன் மச்சூரி யன்
நன்னயமி லாதவஞ் சனைசெய்த தமையன்மூன்
றுமிடத் திலவியா ழம்
நாடோறும்விரோ தமிடு கொண்டோன கொடுத்துளோன்
ராகுகே துக்க ளெனலாம
மன்அயனை அனறுசிறை தனிவிட்டு நம்பற்கு
மந்திர முரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே'

என்ற இப் பாடலினுல் இவர் சோதிட நூலினும் பயிற்சி யுடையாரென்று கூறலாம்.

இந் நூலிற் பயின்றுவரும் சில சொற்றொடர் பொரு ளமைதி வழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றை நோக்க இவரது காலம் இற்றைக்குச் சற்றேறத்தாழ 156 ஆண்டு கட்கு முன் ஆகலாம்.

மணி. திருநாவுக்கரசு முதலியார்.

# பொருளடக்கம்

முருகன் துணை

# குமரேச சதகம்



## காப்பு

### வெண்பா

பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்தம்மேல்
தேமே வியசதகஞ் செப்பவே—கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ் சரவணத்தான் காப்பு.

பூ - பூமி. புல்லை - திருப்புல்வயல் என்ற தலம். தேம்- இனிமை. கோ - தலைமை. சரவணத்தான் - சரவணப் பொய்கையில் அவதரித்தவன்; சரம் + வணத்தான் - மணிவடத்தின் அழகை உடையவன். கம்பம் - அசையும் இயல்புடையது. கும்பம் - குடம் போன்ற மத்தகம். கா—சோலை. குஞ்சரம் - யானை. வணம் - வண்ணம். (வடிவம்)

---

## அவையடக்கம்

### இரட்டை ஆசிரிய விருத்தம்

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவும்
மனைக்குநிக ரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
மருவுமின் மினிபோ லவும்

பாருக்குள் நல்லோர்மு னேபித்தர் பலமொழி
பகர்ந்திடுஞ் செயல் போலவும்
பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
பாரிலா டுதல் போலவும்
பூரிக்கு மினியகா வேரிக்கு நிகரென்று
போதுவாய்க் கால் போலவும்
புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
பொருந்த வைத்தது போலவும்
வாரிக்கு முன்வாவி பெருகல்போ லவுமின்சொல்
வாணர்மு னுகந்து புல்லை
வாலகும ரேசர்மேற் சதகம் புகன்றனன்
மனம்பொறுத் தருள் புரிவையே.

வாரி - கடல். வாவி – குளம். சொல்வாணர் - புலவர்:

சதகம், அகப்பொருள் பற்றியேனும் புறப்பொருள் பற்றியே னும் வரும் நூறு செய்யுட்களாலாகிய பிரபந்தம். சதம் - நூறு. புகலல் - சொல்லல். குமரேசர் - குமர + ஈசர், குணசந்தி.

அவையடக்கம் - சபையைத் தனது தாழ்வு கூறி அடக்குதல். அவை - சபை.

## நூல்

### குமரேசர் பெருமை

பூமிக்கொ ராறுதலை யாய்வந்து சரவணப்
 பொய்கைதனில் விளையாடியும்
புனிதற்கு மந்த்ரவுப தேசமொழி சொல்லியும்
 போதனைச சிறையில் வைத்தும்
தேமிக்க அரிகரப் பிரமாதி கட்குஞ்
 செருக்க முடியா அசுரனைத்
தேகங்கி ழித்துவடி வேலினு லிருகூறு
 செய்தம ரர்சிறை தவிர்த்தும்
நேமிக்கு ளன்பரிட ருற்றசம யந்தனில்
 நினைக்கு முன்வந் துதவியும்
நிதமுமெய்த் துணையாய் விளங்கலா லுலகிலுனை
 நிகரான தெய்வ முண்டோ
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
 மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே.

சரவணம் - நாணற்காடு; இமயமலைக்கருகில் கங்கைநதி பாயும் ஒரு பொய்கை. புனிதன் – சிவபெருமான். போதன் - பிரமன். செருத்தல் - அழித்தல். அமரர் - வானோர். நேமி - பூமி. குகன் - குமரன்; குகையில் உறைபவன். (1)

### அந்தணரியல்பு

குறையாத காயத்ரி யாதிசெப மகிமையுங்
 கூறுசுரு திப் பெருமையுங்
கோதிலா ஆகம புராணத்தின் வளமையுங்
 குலவுயா காதி பலவும்

முறையா நடத்தலாற் சகலதீ வினைகளையு
 முளரிபோ லேதகிப் பார்
முதன்மைபெறு சிலைசெம்பு பிருதுவிக ளிற்றெய்வ
 மூர்த்தமுண் டாக்கு விப்பார்
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையால்
 நீள்மழை பொழிந்தி டுவதும்
நிலமது செழிப்பது மரசர்செங் கோல்புரியு
 நிலையுமா தவர்செய் தவமும்
மறையோர்க ளாலே விளங்குமிவ் வுலகத்தின்
 மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே.

கோது-குற்றம். குலவு-பொருந்திய. முளரி - நெருப்பு. சிலை-கல். பிருதுவி - மண். மறையோர் - பார்ப்பார். (2)

அரச ரியல்பு

குடிபடையி லபிமான மந்திரா லோசனை
 குறிப்பறிதல் சத்ய வசனங்
கொடைநித்த மவரவர்க் கேற்றமரி யாதைபொறை
 கோடாத சதுரு பாயம
படிவிசா ரணையொடுப்ர தானிதள கர்த்தரைப்
 பண்பறிந் தேய மைத்தல்
பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்குநிக ரென்றே
 பரித்தல்குற் றங்கள் களைதல்
துடிபெறு தனக்குறுதி யானநட் பகமின்மை
 சுகுணமொடு கல்வி யறிவு
தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு
 துஷ்ட நிக்ரக சௌரியம்

வடிவுபெறு செங்கோல் நடத்திவரு மரசர்க்கு
வழுவாத முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

படை - சேனை. பொறை - பொறுமை. சதுர் - நான்கு. உபாயம் - சூழ்ச்சி. நான்காவன: சாம தான பேத தண்டம். கோடாத - நெறிதப்பாத. பரித்தல் - காத்தல். துடி - மேன்மை. தோலாத - தோல்வியில்லாத. நிக்கிரகம் - தண்டித்தல். சௌரியம் - வீரம். (3)

## வணிக ரியல்பு

கொண்டபடி போலும்விலை பேசிலா பஞ்சிறிது
கூடிவர நயமு ரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம் வராதபடி
குறுகவே செலவு செய்வார்
வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந்தி டார்
மருவுநா ணயமுளோர் கேட்டனுப் புகினுமவர்
வார்த்தையி லெலாங் கொடுப்பார்
கண்டெழுது பற்றுவர வினின்மயிர் பிளந்தே
கணக்கிலணு வாகிலும் விடார்
காசுவீ ணிற்செல விடாருசித மானதிற்
கனதிரவி யங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

புரட்டர் - மாறுபாடு பண்ணுபவர். முறி - ஓலை. உசிதம் - உத்தமம். கனம் - மேன்மை. (4)

## வேளாள ரியல்பு

நல்லதே வரலயம் பூசனை நடப்பதும்
நாடோறு மழைபொழிவ தும்
நாடிய தபோதனர்கள் மாதவம் புரிவதும்
நவில்வேத வேதிய ரெலாஞ்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோ பனங்களுங் கொற்றவர்கள் செங்கோல்
துலங்குமனு நெறி முறைமையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழும்
மிக்கஅதி காரமுந் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூர வலியும்
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினுன் விளைவ அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பொழிதல் – சொரிதல். தபோதனர் - முனிவர். நவிலல் - புகழல். தொல் புவி - பழமையான பூமி. சுபசோபனம் - மங்கலம். கொற்றவர் - அரசர். சுகிர்தம் - நல்ல வழி. சூரர் - படைவீரர். (5)

## பிதாக்கள்

தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
தனைவளர்த் தவனொரு பிதா
தயையாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
சார்ந்தசற் குருவொரு பிதா
அவமறுத் தாள்கின்ற அரசொரு பிதாநல்ல
ஆபத்து வேளை தன்னில்

அஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னொருபிதா
அன்புள முனோனொரு பிதா
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
கலிதவிர்த் தவனொரு பிதா
காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங்
கருதுவது நீதி யாகும்
மவுலிதனின் மதியரவு புனைவிமல ருதவுசிறு
மதலையென வருகுரு பரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

வித்தை - கல்வி. அவம் - துன்பம். முனோன் - தலைமயன். கவளம் - சோற்றுத்திரள். கலி - வறுமை. காசினி - பூமி. மவுலி - சடை. விமலர் - சிவபெருமான். மதலை - குழந்தை. (6)

ஒன்றை யொன்று பற்றியிருப்பன

சத்தியந் தவறு திருப்பவ ரிடத்தினிற்
சார்ந்துதிரு மாதிருக் குஞ்
சந்ததந் திருமா திருக்கும் இடந்தனிற்
றனதுபாக் கியமிருக் கும்
மெய்த்துவரு பாக்கிய மிருக்கும் இடந்தனில்
விண்டுவின் களையிருக் கும்
விண்டுவின் களைபூண் டிருக்கும் இடந்தனின்
மிக்கான தயையிருக் கும்
பத்தியுட னினியதயை யுள்ளவ ரிடந்தனிற்
பகர்தரும மிகவிருக் கும்
பகர்தரும முள்ளவ ரிடந்தனிற் சத்துரு
பலாயனத் திறலிருக் கும்
வைத்திசை மிகுந்ததிற லுள்ளவ ரிடத்தில்வெகு
மன்னுயிர் சிறக்கு மன்றே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சந்ததம் - எப்பொழுதும். விண்டு - திருமால். பகர்தல் - கூறுதல். பலாயனம் - புறங்காட்டுகை. திறல் - வலிமை. இசை - புகழ். மன்னுயிர் - நிலைபெற்ற உயிர். (7)

இவர்க்கிவர் தெய்வமெனல்

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்க ளேதெய்வம்
அன்பான மாணாக் கருக்
கரியகுரு வேதெய்வம் அஞ்சினோர்க் காபத்
தகற்றினோ னேதெய்வ மாம
காதலுறு கற்புடைய மங்கையர் தமக்கெலாங்
கணவனே மிக்க தெய்வங்
காசினியின் மன்னுயிர் தமக்கெலாங் குடிமரபு
காக்குமன் னவர்தெய்வ மாம
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந் தையர்தெய்வம்
உயர்சாதி மாந்தர் யார்க்கும்
உறவின்முறை யார்தெய்வம விசுவாச முள்ளபேர்க்
குற்றசிவ பத்தர் தெய்வம்
மாதயையி னாற்சூத் திரர்க்குமறை யோர்தெய்வம்
வானவர்க் குத்தெய்வம் நீ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ஆதுலர் - இரப்போர். காதல் - அன்பு. கற்பு - நிறை. மாந்தர் - மனிதர். உறவின்முறையார் - பந்துக்கள். (8)

இவர்க்கிதில் நினைவெனல்

ஞானநெறி யாளர்க்கு மோக்ஷத்தி லேநினைவு
நல்லறிவு ளோர் தமக்கு

நாடோறுந் தருமத்தி லேநினைவு மன்னர்க்கு
ராச்சியந் தன்னில் நினைவு
ஆனகா முகருக்கு மாதர்மே லேநினைவு
அஞ்சாத திருடருக் கிங்
கனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்
காதர்ய மீது நினைவு
தானமிகு குடியாள ருக்கெலாம் வேளாண்மை
தனில்நினைவு கற்ப வர்க்குத்
தருகல்வி மேல்நினைவு வேசியர்க் கினியபொருள்
தருவோர்கள் மீது நினைவு
மானபா னுக்குமரி யாதைமேல் நினைவெற்கு
மாறாதுன் மீது நினைவு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. (9)

இவர்க்கிது இல்லையெனல்

வேசைக்கு நிசமில்லை திருடனுக் குறவில்லை
வேந்தற்கு நன்றி யில்லை
மிடியற்கு விலைமாதர் மீதுவங் கணமில்லை
மிலேச்சற்கு நிறைய தில்லை
ஆசைக்கு வெட்கமிலை ஞானியா னவனுக்குள்
அகமில்லை மூர்க்கன் றனக்
கன்பில்லை காமிக்கு முறையில்லை குணமிலோற்
கழகில்லை சித்த சுத்தன்
பூசைக்கு நவிலங்க சுத்தியிலை யாவுமுணர்
புலவனுக் கயலோ ரிலை
புல்லனுக் கென்றுமுசி தானுசித மில்லைவரு
புலையற் கிரக்க மில்லை

மாசைத் தவிர்ந்தமதி முகதெய்வ யானையொடு
வள்ளிக் கிசைந்த அழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

மிடி -வறுமை. வங்கணம் - நட்பு. மிலேச்சன் - கீழ்மகன், அறிவிலி. நிறை - உறுதிப்பாடு. மூர்க்கன் - அகங்கார முடையவன். மாசு - களங்கம். தவிர்தல் - நீங்குதல். (10)

இப்படிப்பட்டவர் இவரேனல்

நியாயநெறி தவறும லுலகபரி பாலன
நடத்துமவ னேயரச னும்
ராசயோ சனைதெரிந் துறுதியா கியசெய்தி
நவிலுமவ னேமந் திரி
நேயமுட னேதன் சரீரத்தை யெண்ணாத
நிர்வாகி யேசூர னும்
நிலைபெறும் இலக்கணம் இலக்கியம் அறிந்துசொலு
நிபுணகவி யேகவிஞ னும்
ஆயதொரு வாகடந் தாதுவின் நிதானமும்
அறியுமதி யோன் வைத்தியன்
அகமின்றி மெய்யுணர்ந் தைம்புல னொழித்துவிட்
டவனேமெய்ஞ் ஞானி யெனலாம்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத் ரவடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பரிபாலனம் - பாதுகாத்தல். நேயம் - அன்பு. நிர்வாகி-சாமர்த்தியவான். வாகடம் - மருத்துவ நூல். மாயவர் - திருமால். (11)

### விரைந்தடக்கத் தகுவன இவையெனல்

அக்கினியை வாய்முந்து துர்ச்சனரை வஞ்சமனை
யாளைவளர் பயிர்கொள் களையை
அஞ்சா விரோதிகளை அனியாய முடையோரை
அகிர்த்தியப் பெண்க ளார்ப்பைக்
கைக்கினிய தொழிலாளி யைக்கொண்ட அடிமையைக்
களவுசெய் யுந திருடரைக்
கருதிய விசாரத்தை அடக்கமில் பலிசையைக்
கடிதான கோபந தன்னை
மெய்க்கினித லாப்பிணியை அவையுதா சீனத்தை
வினைமூண்டி டுஞ் சண்டையை
விஷமேறு கோரத்தை யன்றடக் குவதலால்
மிஞ்சவிட லாகாது காண்
மைக்கினிய கண்ணிகுற வள்ளிதெய் வானையை
மணஞ்செய்த பேரழக னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

துர்ச்சனர் - துஷ்டர். அகிர்த்தியம் - தப்பான செய்கை. ஆர்ப்பு - சிரிப்பு: பேரொலி. பலிசை - பூத்த சிறுபெண். உதாசீனம் - நிந்தை. (12)

### இவர்க்கிது துரும்பெனல்

தாராள மாகக் கொடுக்குந் தியாகிகள்
தமக்குநற் பொருள் துரும்பு
தன்னுயிரை யெண்ணாத சூரனுக் கெதிராளி
தளமெலா மொரு துரும்பு
போரான பெரியருக் கற்பாது கையினிற்
பிரயோச னந துரும்பு

பெரிதான மோக்ஷசிந் தனையுள்ள வர்க்கெலாம்
பெண்போக மொரு துரும்பு
தீராத சகலமும் வெறுத்ததுற விக்குவிறல்
சேர்வேந்த னொரு துரும்பு
செய்யகலை நாமகள் கடாக்ஷமுள் ளோர்க்கெலாஞ்
செந்தமிழ்க் கவி துரும்பாம்
வாராரு மணிகொண்முலை வள்ளிதெய் வானையை
மணம்புணரும் வடி வேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தளம் - படை. விறல் - வெற்றி. செய்ய - செம்மையாகிய. கலை - நூல். நாமகள் - சரசுவதி. கடாக்ஷம் - கடைக்கண் பார்வை. கவி - பாட்டு. வார் - கச்சு. (13)

இதனை விளக்குவது இதுவெனல்

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி
பார்விளக் குவது மேகம்
பதிவிளக் குவதுபெண் குடிவிளக் குவதாசு
பரிவிளக் குவது வேகம்
இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநலம்
இசைவிளக் குவது சுதிஊர்
இடம்விளக் குவதுகுடி யுடல்விளக் குவதுண்டி
இனியசொல் விளக்குவ தருள்
புகழ்விளக் குவதுகொடை தவம்விளக் குவதறிவு
பூவிளக் குவது வாசம்
பொருள்விளக் குவதுதிரு முகம்விளக் குவதுநகை
புத்தியை விளக்குவது நூல்
மகம்விளக் குவதுமறை சொல்விளக் குவதுநிசம்
வாவியை விளக்குவது நீர்

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

இரவி - சூரியன். நிசி - இரா. பதி - கணவன். பரி - குதிரை. இகல் - போர். சுதி - சுருதி. மகம் - யாகம் மறை - வேதம். (14)

பிறப்பிட நன்மையால் நன்மை பெறுமை

சிங்கார வனமதி லுதிப்பினுங் காகமது
தீஞ்சொல்புகல் குயிலாகு மோ
திரையெறியும் வாவியிற் பூத்தாலு மேகொட்டி
செங்கஞ்ச மலராகு மோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்றாகு மோ
ஆண்மையா கியநல்ல குடியிற் பிறந்தாலு
மசடர்பெரி யோராவ ரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாலக்கி ராமமா மோ
தடமேவு கடலநீரி லேயுப்பு விளையினுஞ்
சாரசர்க் கரையாகு மோ
மங்காத செந்தமிழ்க் குறுமுனிக் குபதேசம்
வைத்தமெய்ஞ் ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

வனம் - சோலை. திரை - அலை. கஞ்சம் - தாமரை. அசடர் - கீழ்மக்கள் சாலக்கிராமம் - பூசித்தற்குரிய விஷ்ணு முத்திரையுள்ள ஒருவகைக் கல். குறுமுனி - அகத்தியர், (15)

## பலர்க்கும் பயன்படுவன

கொண்டல்பொழி மாரியும் உதாரசற் குணமுடைய
கோவும்ஊ ருணியின் நீருங்
கூட்டமிடும் அம்பலத் துறுதருவின் நீழலுங்
குடியாளர் விவசாய மும்
கண்டவர்க ளெல்லாம் வரும்பெருஞ் சந்தியிற்
கனிபல பழுத்த மரமுங்
கருணையுட னேவைத் திடுந்தணீர்ப் பந்தலுங்
காவேரி போலூற்ற மும்
விண்டலத் துறைசந்தி ராதித்த கிரணமும்
வீசுமா ருத சீதமும்
விவேகியெனு நல்லோ ரிடத்திலுறு செல்வமும்
வெகுசனர்க் குபகார மாம்
வண்டிமிர் கடப்பமலர் மாலையணி செங்களப
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கொண்டல் - மேகம். கோ - அரசன். ஊருணி - ஊாருண்ணும் பொதுநீர். அம்பலம் - சபை. தரு - மரம். மாருதம்- காற்று. சீதம் - குளிர்ச்சி. இமிர்தல் - ஒலித்தல். களபம் - சந்தனக்கலவை.

(16)

## தாம் அழியினுங் குணம் அழியாதவை

தங்கமா னதுதழலில் நின்றுருகி மறுகினுந்
தன்னொளி மழுங்கி டாது
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமே
தன்மணங் குன்றி டாது

பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமே
  பொலிவெண்மை குறைவு றாது
 போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
  பொருந்துசுவை போய்வி டாது
துங்கமணி சாணையிற் றேய்ந்துவிட் டாலுந்
  துலங்கு குணமொழியாது பின்
 தொன்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்களது
  தூயநிறை தவறுகு மோ
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
  மருவுதிண் புயவாச னே
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
  மலைமேவு குமரேச னே.

தழல் - அழல் சந்தனக் குறடு - சந்தனக்கட்டை. பொங்கம் பொலிவு. துங்கம் - உயர்ச்சி; தூய்மை. துலங்குதல் விளங்குதல். நிறை - மாட்சிமை. மடிதல் - கெடுதல். சுர குஞ்சரி தெய்வயானை. (17)

## நரகில் வீழ்வோர்

மன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
  மறந்தவர் கொலைப் பாதகர்
 மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
  மருவித் திரிந்த பேர்கள்
அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினோர்
  அரசடக் கிய அமைச்சர்
 ஆலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதகர்
  அருந்தவர் தமைப்பழித் தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
  முகஸ்துதி வழக் குரைப்போர்

முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினத்தவர்கள்
முழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்றொருவர் வைத்தபொரு ளபகரித்தோ ரிவர்கள்
மாநரகில் வீழ்வ ரன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சமர் - போர். பரதாரம் - பிறர் மனைவி. காதகர் - கொலையா ளிகள். மன் - பொருந்திய. அபகரித்தல் - திருடிச்சேர்த்தல். (18)

சரீரசுகம்

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரேசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலம் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
மூதறிவி னொடுதனது வயதினுக் கிளையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றுதயிர் காய்ச்சுபால் நீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவ்வளவா றாலும் புசித்தபின்
தாகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவல்இவை மேலவர்
சரீரசுக மாமென்பர் காண்
மாதவகு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் குகந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

மறு - மாசு. மூதறிவு - பேரறிவு. விரோசனம் - மலங் கழி தல். சாரங்கம் - மான் சரசம் - இனிய குணம். (19

## யார்க்கும் அனுபோகம் விடாமை

தேசுபெறு மேருப்ர தக்ஷணஞ் செய்துமதி
தேகவடு நீங்க இல்லை
திருமால் உறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை ஒழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு ஆகும்
இனியகண் ஆகிவரு பரிதியா னவனுக்
கிராகுவோ கனவி ரோதி
ஆசிலாப் பெரியோர் இடத்தினில் அடுக்கினும்
அமைத்தபடி அன்றி வருமோ
அவரவர்கள் அனுபோகம் அனுபவித் திடல்வேண்டும்
அல்லால் வெறுப்ப தெவரை
வாசவனும் உம்பரனை வரும்விசய சயவென்று
வந்துதொழு தேத்து சரணு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தேசு – ஒளி. ப்ரதக்ஷணம் செய்தல் – வலமாக வருதல். மதி – சந்திரன். வடு – தழும்பு சேடன் – ஆதிசேஷன். உவணன் – கருடன். செறுதல் – கொல்லுதல். பரிதி-சூரியன். வாசவன் – இந்திரன். உம்பர் – தேவர்கள். (20)

## இதுவின்றி இதுசிறவா தெனல்

குருவிலா வித்தைகூர் அறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி ஆசை
குடிநலம் இலாநாடு நீதியில் லாஅரசு
குஞ்சரமி லாத வெம்போர்

திருவிலா மெய்த்திறமை பொறையிலா மாதவந்
　　தியானமில் லாத நிஷ்டை
　தீபமில் லாதமனை சோதரமி லாதஉடல்
　　சேகரம் இலாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா உண்டிபுகல்
　　உண்மையில் லாத வசனம்
　யோசனையி லாமந்த்ரி தைரியம் இலாவீரம்
　　உதவியில் லாத நட்பு
மருஇலா வண்ணமலர் பெரியோர் இலாதசபை
　　வையத் திருந்தென் பயன்
　மயிலேறி விளையாடு குகனேபுல வயல்நீடு
　　மலைமேவு குமரேச னே.

கூர் - மிகுந்த. வாணிபம் - வர்த்தகம். சோதரம் - உடன் பிறப்பு. சேகரம் - முடி. சென்னி - தலை. உரு-அழகு. வளமை - செழிப்பு. மரு - வாசனை. வையம் - உலகம். (21)

## பகைக்கப்படாதவர் இவரெனல்

அரசர்பகை யுந்தவம் புரிதபோ தனர்பகையும்
　　ஆரியகரு ணீகர் பகையும்
　அடுத்துக் கெடுப்போர் கொடும்பகையும் உள்பகையும்
　　அருளிலாக் கொலைஞர் பகையும்
விரகுமிகும் ஊரினுள் ளோருடன் பகையுமிகு
　　விகடப்ர சங்கி பகையும்
　வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
　　விழைமருத் துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையும்ஆ சான்பகையும்
　　உறவின்முறை யார்கள் பகையும்

உற்றதிர வியமுளோர் பகையுமந் திரிபகையும்
ஒருசிறிதும் ஆகாது காண்
வாநதியின் மதலையென இனியசர வணமிசையில்
வருதருண சிறு குழவியே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தபோதனர் - முனிவர். கருணீகர் - கணக்கர். அடுத்தல் - நெருங்கிப் பழகுதல். விரகு - சாமர்த்தியம். விழை - விரும்பும். உரம் - ஞானம். கவிவாணர் - புலவர். ஆசான் - குரு. வாநதி - கங்கை. மதலை - குழந்தை. (22)

## பேயெனப்படுவோர் இவரேனல்

கடனுதவு பேர்வந்து கேட்கும்வே ளையில்முகங்
கடுகடுக் கின்ற பேயுங்
கனமருவு பெரியதனம் வந்தவுடன் இறுமாந்து
கண்விழிக் காத பேயும்
அடைவுடன் சத்துருவின் பேச்சைவிசு வாசித்
தகப்பட் டுழன்ற பேயும்
ஆசைமனை யாளுக்கு நேசமாய் உண்மைமொழி
ஆனதை உரைத்த பேயும்
இடரிலா நல்லோர்கள் பெரியோர்க ளைச்சற்றும்
எண்ணு துரைத்த பேயும்
இனியபரி தானத்தில் ஆசைகொண் டொருவற்
கிடுக்கண்செய் திட்ட பேயும்
மடமனை இருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
வசைபெற்ற பேய்கள் அன்றோ

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

இறுமாப்பு - அகங்காரம். அடைவு - முறை. சத்துரு - பகைவன். உழலுதல் - வருந்துதல். இடர் - துன்பம். பரிதானம் - இலஞ்சம். இடுக்கண் - துன்பம். மடம் - இளமை. மனை - மனைவி. வசை - நிந்தை. (23)

அவ்வவ் இனத்தில் உயர்ந்தவை

தாருவில் சந்தானம் நதியினில் கங்கைவிர
தத்தினில் சோம வாரம்
தகைபெறு நிலத்தினில் காஸ்மீர கண்டந்
தலத்தில் சிதம்பர தலம்
சீருலவு ரிஷிகளில் வசிட்டர்பசு விற்காம
தேனுமுனி வரில்நா ரதன்
செல்வநவ மணிகளில் திகழ்பதும ராகமணி
தேமலரில் அம்போ ருகம்
பேருலவு கற்பினில் அருந்ததி கதித்திடு
பெலத்தின்மா ருதம் யானையில்
பேசில்ஐ ராவதம் தமிழினில் அகத்தியம்
பிரணவம் மந்திரத் தில்
வாரிதியி லேதிருப் பாற்கடல் குவட்டினில்
மகாமேரு ஆகும் அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தருவென்பது தாருவென முதல் நீண்டது. தரு - மரம். சோமவாரம் - திங்கட்கிழமை. தகை - மேன்மை. திகழ்தல் - விளங்குதல். அம்போருகம் - தாமரை. கதித்தல் - மிகுதல். மாருதம் - காற்று. ஐராவதம் - இந்திரனது வெள்ளையானை. பிரணவம் - ஓங்காரம். குவடு - மலை. (24)

## அவரவர்க்குப் பேலமாவன

அந்தணர்க் குயர்வேத மேபெலம் கொற்றவர்க்
கரியசௌ ரியமே பெலம்
ஆனவணி கர்க்குநிதி யேபெலம் சூத்திரர்க்
காயின்ஏர் உழவே பெலம்
மந்திரிக் குச்சதுர் உபாயமே பெலம்நீதி
மானுக்கு நடுவே பெலம்
மாதவர்க் குத்தவசு பெலம்மடவி யர்க்குநிறை
மானமிகு கற்பே பெலம்
தந்திர மிகுத்தகன சேவகர் தமக்கெலாஞ்
சாமிகா ரியமே பெலம்
சான்றவர்க் குபபொறுமை யேபெலம் புலவோர்
தமக்குநிறை கலவி பெலமாம
வந்தனை செயும்பூசை செய்பவர்க் கன்புபெலம்
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கொற்றவன் - அரசன். சௌரியம் - வீரம். நிதி - திரவியம். ஆய்தல் - ஆராய்தல். நேர் - பொருந்திய. நடு - நடு நிலைமை. மடவியர் - பெண்கள் சாமி - எஜமானன். வந்தனை - வழிபாடு. வால வடிவு-இளைய உருவம். (25)

## இருந்தும் பயன்படாதவை

தருணத்தில் உதவிசெய் யாதநட் பாளர்பின்
தந்தென தராமல் என்ன
தாரதரம் அறிந்துமுறை செய்யாத மன்னரைச்
சார்ந்தென்ன நீங்கில் என்ன

பெருமையுடன் ஆண்மையில் லாதஒரு பிள்ளையைப்
பெற்றென பெறாமல் என்ன
பிரியமாய் உள்ளன்பி லாதவர்கள் நேசம்
பிடித்தென விடுக்கில் என்ன
தெருளாக மானமில் லாததொரு சீவனஞ்
செய்தென செயாமல் என்ன
தேகிஎன வருபவர்க் கீயாத செல்வஞ்
சிறந்தென முறிந்தும் என்ன
மருவிளமை தன்னிலில் லாதகன் னிகைபின்பு
வந்தென வராமல் என்ன
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தருணம் - வேளை. தாரதாம் - வரிசை. சார்தல் - சேர்ந்திருத்தல். தெருளாக - தெளிவாக. சீவனம் - வாழ்க்கை. தேகி - கொடு. கன்னிகை - பருவ மங்கை. (26)

## உபகாரம் இல்லாதவை

கடல்நீர் மிகுந்தென்ன ஒதிதான் பெருத்தென்ன
காட்டிலவு மலரில் என்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால் சுரந்தென்ன
கானில்மழை பெய்தும் என்ன
அடர்கழுதை லத்திநிலம் எல்லாங் குவிந்தென்ன
அரியகுணம் இல்லாத பெண்
அழகா யிருந்தென்ன ஆஸ்தான கோழைபல
அரியநூல் ஓதி என்ன
திடமினிய பூதம்வெகு பொன்காத் திருந்தென்ன
திறன்மிகுங் கரடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெலாஞ்
சித்திரத் துற்றும் என்ன

மடமிகுந் தெவருக்கும் உபகாரம் இல்லாத
வம்பர்வாழ் வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ஒதி - ஒதியமரம். இலவு - இலவமரம். சுரத்தல் - ஊறுதல். கான் - பாலைவனம். அடர்தல் - நெருங்குதல். ஆஸ்தான கோழை- சபைக்கு அஞ்சுபவன். திடம - வலிமை செறிவு - நெருக்கம். பூஷணம் - ஆபரணம். மடம் - அறியாமை. (27)

## பதரெனப் படுவோர்

தனபெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்தபதர்
சமர்கண் டொளிக்கும்பதர்
தக்கபெரி யோர்புத்தி கேளாத பதர்தோழர்
தம்மொடு சலிக்கும் பதர்
பின்புகா ணுவிடந் தன்னிலே புறணிபல
பேசிக் களிக்கும் பதர்
பெற்றதாய் தந்தையர் படவாழ்ந் திருந்தபதர்
பெண்புத்தி கேட்கும் பதர்
பொன்பணம் இருக்கவே போயிரக் கின்றபதர்
பொய்ச்சாட்சி சொல்லும பதர்
புவியோர் நடத்தையை இகழ்ந்தபதர் தன்மனைவி
புணர்தல்வெளி யாக்கும் பதர்
மன்புணரும் வேசையுடன் விபசரிக் கின்றபதர்
மனிதரில் பதரென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பதர் - பயனற்றவர் சலித்தல் - விரோதித்தல். புறணி - புறங் கூறல். களித்தல் - மகிழ்தல். மன் - பொருந்தும். (28)

## காணுவிடில் துயரப்படமேவை

இரவிகா ணுவனசம் மாரிகா ணுதபயிர்
இந்துகா ணுத குமுதம்
ஏந்தல்கா ணுநாடு கரைகள்கா ணுஓடம்
இன்சொல்கா ணுவி ருந்து
சுரபிகா ணுதகன் றன்னைகா ணுமதலை
சோலைகா ணுத வண்டு
தோழர்கா ணுநேயர் கலைகள்கா ணுதமான்
சோடுகா ணுத பேடு
குரவர்கா ணுதசபை தியாகிகாணு வறிஞர்
கொழுநர்கா ணுத பெண்கள்
கொண்டல்கா ணுதமயில் சிறுவர்கா ணுவாழ்வு
கோடைகா ணுத குயில்கள்
வரவுகா ணுதசெல விவைபெலாம புவிமீதில்
வாழ்வுகா ணுஇளமை யாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

வனசம் - தாமரை. மாரி - மழை இந்து - சந்திரன். குமுதம்- ஆம்பல். ஏந்தல் - அரசன். ஓடம் - தோணி. சுரபி - பசு. கலை - ஆண் மான். சோடு - உடன்சேர்ந்த ஆண் பேடு - பெட்டை. குரவர் - மூத்தோர். தியாகி - கொடையாளி. கொழுநன் - கணவன். (29)

## வியாதி மூலங்கள்

கல்வினுல் மயிரினுல் மீதூண் விரும்பலால்
கருதிய விசாரத்தி னுல்
கடுவழி நடக்கையால் மலசலம் அடக்கையால்
கனிபழங் கறிஉண்ண லால்

நெல்லினுல் உமியினுல் உண்டபின் மூழ்கலால்
நித்திரைகள் இல்லாமை யால்
நீர்ப்பகையி னுல்பனிக் காற்றினுடல் நோதலால்
நீடுசருகு இலைஊற லால்
மெல்லிநல் லார்கலவி அதிகம்உள் விரும்பலால்
வீழ்மலஞ் சிக்குகையி னுல்
மிகுசுமை யெடுத்தலால் இளவெயில் காய்தலால்
மெய்வாட வேலை செயலால்
வல்இரவி லேதயிர்கள் சாகாதி உண்ணலால்
வன்பிணிக் கிடமென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கருதுதல் – இடைவிடாது நினைத்தல். மீதூண் - அளவுக்கு மிஞ்சிய ஆகாரம். கடுவழி - கல்லு முள்ளும் உறுத்தும் பாதை. நோதல் – வேதனைப்படல். சருகு - உலர்ந்த இலை. நல்லார் - பெண்கள். சாகம் - கீரை. பிணி - நோய். (30)

## சேத்தும் சாகாதவர்

அனைவர்க்கும் உபகாரம ஆம்வாவி கூவம்உண்
டாக்கினோர் நீதி மன்னர்
அழியாத தேவால யங்கட்டி வைத்துளோர்
அகரங்கள் செய்த பெரியோர்
தனையொப்பி லாப்புதல்வனைப்பெற்ற பேர்பொருது
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனில் நிலைநிற்க எந்நாளும் மாருத
தருமங்கள் செய்த பேர்கள்
கனவித்தை கொண்டவர்கள் ஓயாத கொடையாளர்
காவியஞ் செய்த கவிஞர்

கற்பினில் மிகுந்தஒரு பத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர்கள் இம்
மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவர் ஆகும் அன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கூவம் - கிணறு. தேவாலயம் - கோவில். அகரம் - ஊர். ஒப்பு-நிகர். பொருதல் - போர்செய்தல். தரணி - பூமி. மாறுதல் - வேறு படுதல். காவியம் - பெரிய நூல் கவிஞர் - புலவர். மடந்தை - பெண். (31)

சாகாதிருந்துஞ் செத்தவர்

மாறாத வறுமையோர் தீராத பிணியாளர்
வருவேட் டகத்தில உண்போர்
மனைவியை வழங்கியே சீவனஞ் செய்குவோர்
மன்னுமொரு ராச சபையில்
தூறாக நிந்தைசெய் துய்குவோர் சிவிகைகள்
சுமந்தே பிழைக்கின்ற பேர்
தொலையா விசாரத் தழுந்துவோர் வார்த்தையில்
சோர்வுபட லுற்ற பெரியோர்
வீறாக மனையாள் தனக்கஞ்சி வந்திடு
விருந்தினை ஒழித்து விடுவோர்
வீம்புடன் செல்லாத விவகாரம் அதுகொண்டு
மிக்கசபை ஏறும் அசடர்
மாறாக இவரெலாம் உயிருடன் செத்தசவம்
ஆகியொளி மாய்வர் கண்டாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தீர்தல் - நீங்குதல். வேட்டகம் - மனைவி வீடு. தூறுதல் - பழித்தல். உய்தல் - பிழைத்தல். சிவிகை - பல்லக்கு. சோர்தல் - தளர்வடைதல். வீறாக - விரைவாக. வீம்பு - தற்பெருமை. (32)

## சிறிதும பயன்படாதவர்

பதராகி லுங்கன விபூதியிளை விக்கும்
பழமைபெறு சுவராகி லும்
பலருக்கும் மறைவாகும் மாடுரிஞ் சிடும்மலம்
பன்றிகட் குபயோக மாம்
கதம்மிகு கடாஎன்னில் உழுதுபுவி காக்கும்வன்
கழுதையும் பொதி சுமக்கும
கல்லெனில் தேவர்களும ஆலயமும் ஆம்பெரும்
கான்புற்றும அரவ மனையாம்
இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயும்
இழிவுறு குரங் காயினும்
இரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோல்
ஏற்றமா ளிகை விளக்கும்
மதமது மிகும்பரம லோபரால் உபகாரம்
மற்றொரு வருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பதர் - பயனற்ற உமி. விபூதி - திருநீறு. உரிஞ்சுதல்-உராய்தல். கதம் - கோபம். பொதி - சுமை. (33)

## உலுத்தர் இயல்பு

திரவியங் காக்குமொரு பூதங்கள் போல்பணந்
தேடிப் புதைத்து வைப்பார்
சீலநல மாகவுங் கட்டார்கள் நல்லமுது
செய்துணார் அறமுஞ் செயார்
புரவலர்செய் தண்டந் தனக்கும் வலுவாகப்
புகுந்திருட ருக்கும் ஈவார்

புலவரைக் கண்டவுடன் ஓடிப் பதுங்குவார்
புராணிகர்க் கொன்றும் உதவார்
விரகறிந் தேபிள்ளை சோறுகறி தினுமளவில்
வெகுபணஞ் செலவாக லால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவுபார்க் கின்றதே அல்லாது லோபியர்கள்
மற்றொருவ ருக் கீவரோ
மயிலேறி விளையாடு குகனைபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

உலுத்தர்-லோபியர். சீலை - துணி புரவலன் - அரசன். (34)

திருவாழ் இடங்கள்

கடவா ரணத்திலும் கங்கா சலத்திலும
கமலா சனந் தன்னிலும்
காகுத்தன் மார்பிலும் கொற்றவர் இடத்திலும்
காலியின் கூட்டத்தி லும்
நடமாடு பரியிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோ ரிடந்தன்னி லும்
நல்லசுப லக்ஷண மிகுந்தமனை தன்னிலும்
ரணசுத்த வீரர் பாலும்
அடர்கேத தனத்திலும் சுயம்வரந் தன்னிலும்
அருந்துளசி வில்வத் திலும்
அலர்தரு கடப்பமலர் தனிலும்இர தத்திலும்
அதிகுண மான ரூப
மடவா ரிடத்திலும் குடிகொண்டு திருமாது
மாறு திருப்பள் அன்றே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கடம் - மதம். வாரணம் - யானை. கமலம் - தாமரை. காகுத்தன் - மால். காலி - பசுக்கூட்டம். பரி - குதிரை. கேதனம்-விருதுக்கொடி. சுயம்வரம் - (பெண்) தானுகவரித்து மணமாலையிடல். இரதம் - தேர். திருமாது - இலக்குமி. (35)

## மூதேவி வாழிடங்கள்

சோரமங் கையர்கள்நிசம் உரையார்கள் வாயினில்
சூதகப் பெண்கள் நிழலில்
சூளையில் சூழ்தலுறு புகையில் களேபரம்
சுடுபுகையில் நீசர் நிழலில்
காரிரவில் அரசுநிழ லில்கடா நிழலினொடு
கருதிய விளக்கு நிழலில்
காமுகரில் நிஷ்டையில் லாதவர் முகத்தில்
கடுஞ்சினத் தோர் சபையினில்
ஈரமில் லாக்களர் நிலத்தினில் இராத்தயிரில்
இழியுமது பானர் பாலில்
இலைவேல் விளாநிழலில் நிதமழுக் கடைமனையில்
ஏனம்நாய் அசம்கரத் தூள்
வாரிய முறத்தூள் பெருக்குதூள் மூதேவி
மாரு திருப்பள் என்பார்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சோரம் - விபசாரம் சூதகம் - தீட்டு. சூளை - காளவாய். களேபரம் - பிணம். அரசு - அரசமரம். களர்நிலம் - உப்பு நிலம். விளா-விளாமரம். ஏனம் - பன்றி. அசம் - ஆடு. கரம் - கழுதை. (36)

## திருத்தினுந் திருந்தாமை

கட்டிஎரு விட்டுச் செழுந்தேனை வார்க்கினுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டிவைத் தோமம் வளர்க்கினுங்
கதிபெறுங் குதிரை ஆமோ
குட்டியர வுக்கமு தளித்தே வளர்க்கினும்
கொடுவிடம் அலாது தருமோ
குக்கல்நெடு வாலுக்கு மட்டையைக் கட்டினுங்
கோணு மலே நிமிருமோ
ஒட்டியே குறுணிமை இட்டாலு நயமிலா
யோனிகண் ஆகி விடுமோ
உலவுகன கர்ப்பூர வாடைபல கூட்டினும்
உள்ளியின் குணமாறு மோ
மட்டிகட் காயிரம் புத்திசொன் னாலும்அதில்
மார்க்கமரி யாதை வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

எரு - சாணம். ஓமம் - யாகம். கதி - நடை. உலவுதல் - சஞ்சரித்தல். உள்ளி - வெள்ளைப்பூண்டு. குக்கல் - நாய். மரியாதை - ஒழுங்கு. (37)

## குறிப்பறிதல்

மனதில் கடும்பகை முகத்திலை் அறியலாம்
மாநிலப் பூடுக ளெலாம்
மழையினால் அறியலாம் நல்லார்பொ லார்தமை
மக்களால் அறிய லாகும்
கனமருவு சூரரைச் சமரினால் அறியலாம்
கற்றவொரு வித்துவா னைக்
கல்விப்ர சங்கத்தி னாலறிய லாம்குணங்

களைநடையி னலறிய லாம்
தனதகம் அடுத்தது பளிங்கினல் அறியலாம்
சாதிசொல் லாலஅறிய லாம்
தருநீதி கேள்வியால் அறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளால்அறிய லாம்
வனசவிக சிதவதன பரிபூர ணனந்த
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பூடு - புல் பூண்டு. மக்கள் - பிள்ளைகள். தாது - நாடி. விகசிதம் - மலர்தல். வதனம் - முகம். (38)

## குணம் மாருமை

குணமிலாத் துஷ்டமிரு கங்களையும் நயகுணம்
கொண்டுட் படுத்தி விடலாம்
கொடியபல விடநோய்க ளியாவுமௌ ஷதமது
கொடுத்துத் திருப்பி விடலாம்
உணர்விலாப் பிரமராட் சசிமுதல் பேய்களை
உகந்துகூத் தாட்டி விடலாம்
உபாயத்தி னல்பெரும் பறவைக்கு நற்புத்தி
உண்டாக் கலாம்உயிர் பெறப்
பிணமதை எழுப்பலாம் அக்கினி சுடாமல்
பெரும்புனல் எனச் செய்யலாம்
பிணியையும அகற்றலாம் காலதூ துவரையும்
பின்புவரு கென்று சொலலாம்
மணலையுங் கயிறாத் திரிக்கலாங் கயவர்குணம்
மட்டுந் திருப்ப வசமோ

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ஔஷதம் - மருந்து உணர்வு - அறிவு. உகந்து - மகிழ்ந்து. புனல் - நீர். கயவர் - கீழ்மக்கள். (39)

இத்தீக்குணத்தோர் இவ்விலங்கு போல்வரேனல்

தான்பிடித் ததுபிடிப் பென்றுமே லவர்புத்தி
தள்ளிச்செய் வோர் குரங்கு
சபையில் குறிப்பறிய மாட்டாமல் நின்றவர்
தாம்பயன் இலாத மரமாம்
வீம்பினால் எளியவரை எதிர்பண்ணி நிற்குமொரு
வெறியர்குரை ஞமலி ஆவார்
மிகநாடி வருவோர் முகம்பார்த் திடாலோபர்
மேன்மையில் லாத கழுதை
சோம்பலொடு பெரியோர் சபைக்குள் படுத்திடுந்
தூங்கலே சண்டிக் கடா
சூதுடன் அடுத்தோர்க் கிடுக்கணே செய்திடுந்
துஷ்டனே கொட்டு தேளாம்
மாம்பழந் தனைவேண்டி அந்நாளில் ஈசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

மேலவர் - உயர்ந்தோர் வெறியர் - பித்தர். குரை - குலைக்கின்ற. ஞமலி - நாய். தூங்கல் - சோம்பேறி. சண்டிக்கடா - முருட்டுக்கடா. (40)

அற்பர் வாழ்வால் குணம் வேறுபடுதல்

அற்பர்க்கு வாழ்வுசற் றதிகமா னால்விழிக்
கியாவரும் வுந்தோன் றிடா

தண்டிநின் றேநல்ல வார்த்தைகள் உரைத்தாலும்
அவர்செவிக் கேறி டாது
முற்பக்ஷ மானபேர் வருகினும் வாருமென
மொழியவும் வாய் வராது
மோதியே வாதப் பிடிப்புவந் ததுபோல
முன்காலை அகல வைப்பார்
விற்பனம் மிகுத்தபெரி யோர்செய்தி சொன்னாலும்
வெடுவெடுத் தேசி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
விழும்போது தீரு மென்பார்
மல்புயந் தனில்நீப மாலையணி லோலனே
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

அண்டி - நெருங்கி. விற்பனம் - கல்வி. நீபமாலை - கடப்ப மாலை. லோலன் - விருப்பமுடையவன். (41)

இத்தீங்குளோர் இக்கோள் போல்வரேனல்

அன்னைதந் தையர்புத்தி கேளாத பிள்ளையோ
அஷ்டமச் சனியாகு வான்
அஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்கில்
அங்காரகச் சன்ம மாம்
தன்னமிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளாஅடிமை
சந்திராஷ் டகமென்ன லாம்
தன்பங்கு தாவென்று சபையேறு தம்பியோ
சார்ந்தசன் மச்சூரி யன்
நன்னயமி லாதவஞ் சனைசெய்த தமையன்மூன்
றாமிடத் தில்வியா ழம்

நாடொறும் விரோதமிடு கொண்டோன் கொடுத்துளோன்
ராகுகே துக்க மெனலாம்
மன்னயனை அன்றுசிறை தனிலிட்டு நம்பற்கு
மந்திரம் உரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

அன்னை - தாய். அஷ்டமம் - எட்டாமிடம். அங்காரகன் - செவ்வாய். சந்திராஷ்டகம் - சந்திரன் + அஷ்டகம் - எட்டாமிடச் சந்திரன். வஞ்சனை - சூது. வியாழம் - குரு. அயன் - பிரமன். நம்பன் - பரமேசுவரன். (42)

நல்லினஞ்சேர்பயன்

சந்தன விருக்ஷத்தை அண்டிநிற் கின்றபல
தருவும் வாசனை தரும்
தங்கமக மேருவை அடுத்திடுங் காக்கையுஞ்
சாயல்பொன் மயமே தரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தணீரெலாம்
பால்போல் நிறங்கொடுக் கும்
படிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங்கொடுக் கும்
அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடில்
அடுத்ததும் பசுமை யாகும்
ஆனபெரி யோர்களொடு சகவாசம் அதுசெயின்
அவர்கள்குணம் வருமென்பர் காண்
மந்தர நெடுங்கிரியின் முன்கடல் கடைந்தஅரி
மருகமெய்ஞ் ஞான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

சாயல் - நிறம். விளாவுதல் - கலத்தல். வடம் - கயிறு. அந்தம் - அழகு. தரித்தல் - அணிதல். சகவாசம் - நட்பு. (43)

## வலியோரையும் ஊழ்விடாமை

அன்றுமுடி சூடுவ திருக்காரு ராமன்முன்
அருங்கா டுறைந்த தென்ன
அண்டரெல் லாமமிர்தம் உண்டிடப் பரமனுக்
காலம் லபித்த தென்ன
வென்றிவரு தேவர்சிறை மீட்டநீ களவில்வே
டிச்சியைச் சேர்ந்த தென்ன
மேதினி படைக்குமய னுக்கொரு சிரம்போகி
வெஞ்சிறையி லுற்ற தென்ன
என்றுமொரு பொய்சொலா மன்னவன் விலைபோன
தென்னகாண் வல்லமையி னால்
எண்ணத்தி னொன்றும் வாராது பரமசிவன்
எத்தனப் படிமுடியு மாம்
மன்றுதனில் நடனமிடு கங்கா தரன்பெற்ற
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

உறைதல் - வாசஞ்செய்தல். ஆலம் - நஞ்சு. இலபித்தது - கிடைத்தது. வென்றி - வெற்றி. மேதினி - உலகம். சிரம் - தலை. எத்தனம் - நோக்கம். மன்று- பொன்னம்பலம். (44)

## பெரியோர் வாக்ய பரிபாலனஞ் செய்தோர்

தந்தைதாய் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
தசரத குமார ராமன்
தமையனருள் வாக்யபரி பாலனஞ் செய்தோர்கள்
தருமனுக் கிளைய நால்வர்
சிந்தையில் உணர்ந்துகுரு வாக்யபரி பாலனஞ்
செய்தவன் அரிச்சந் திரன்

தேகியென் றோர்க்கிலை என்றுவாக்ய பாலனஞ்
செய்தவன் தான கன்னன்
நிந்தைதவிர் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
நீள்பெல மிகுத்த அநுமான்
நிறையுடன் பத்தாவின் வாக்யபரி பாலனம்
நிலத்தினில் நளாயினி செய்தாள்
மந்தைவழி கோயில்குள முங்குலத்தும்பிமுகன்
மகிழ்தர உகந்த துணைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

வாக்யம் - வார்த்தை. பரிபாலித்தல் - காப்பாற்றுதல். தானம் - கொடை. கன்னன் - கர்ணன். நிந்தை - பழி. மந்தை - ஆடு மாடு தங்குமிடம். தும்பி - யானை. (45)

முயற்சியின் மிக்கது ஊழெனல்

வங்காளம் ஏறுகினும் வாருகோல் ஒருகாசு
மட்டன்றி அதிக மாமோ
வான்ஏறி உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி
வண்ணப் பருந்தாகு மோ
கங்கா சலந்தன்னில் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய்நல்ல சுரை ஆகுமோ
கடலுக்குள் நாழியை அமுக்கியே மொண்டிடிற்
காணுமோ நால்நாழி தான்
ஐங்காதம் ஓடினுந் தன்வினைகள் தன்னுடே
அடையாமல் நீங்கி விடுமோ
யாரிடஞ் சென்றாலும் வெகுதொலைகள் சுற்றினும்
அமைத்தபடி அன்றி வருமோ
மங்காத செந்தமிழ்க் கொண்டுநக் கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

வாருகோல் - துடைப்பம். ஊர்க்குருவி - அடைக்கலங் குருவி. பருந்து - கருடன். அமுக்குதல் - அழுத்துதல். மொள்ளல் - முகத்தல். (46)

## இடும்பால் அழிவு

சூரபத் மன்பெலமும் இராவணன் தீரமும்
துடுக்கான கஞ்சன் வலியும்
துடியான இரணியன் வரப்ரசா தங்களுந்
தொலையாத வாலி திடமும்
பாரமிகு துரியோத னதிநூற் றுவராது
பராக்கிரமமும் மது கைடவர்
பாரிப்பும் மாபெலிதன் ஆண்மையுஞ் சோமுகன்
பாங்கிலுறு வல்லமைகளும்
ஏரணவு கீசகன் கனதையுந் திரிபுரர்
எண்ணமுந் தக்கன் எழிலும்
இவர்களது சம்பத்தும் நின்றவோ அவரவர்
இடும்பால் அழிந்த அன்றோ
மாரனைக் கண்ணால் எரித்தருள் சிவன்தந்த
வரபுத்ர வடி வேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

தீரம் - வீரத்தன்மை. துடுக்கான - தீக்குணமுள்ள. துடியான - செருக்குள்ள. மது, கைடவர் என்ற இருவரும் திருமாலினது செவியிலிருந்து தோன்றிய அசுரர்கள். பாரிப்பு - அதிகரிப்பு. பாங்கில் - பக்கத்தில். ஏர் - அழகு. அணவுதல் - பொருந்துதல். கனதை - மேன்மை. மாரன் - மன்மதன். (47)

நட்புநிலை

மாமதியில் முயலான ததுதேய் வழித்தேய்ந்து
வளருமப் போது வளரும்
வாவிதனில் ஆமபல்கொட் டிகளதனில் நீர்வற்றில்
வற்றிடும் பெருகில் உயரும்
பூமருவு புதல்பூடு கோடையில் தீய்ந்திடும்
பொங்குகா லந் தழைக்கும்
புண்டரிகம் இரவிபோம் அளவில் குவிந்திடும்
போதுதய மாகில் மலரும்
தேமுட விளக்கிலுயிர் கூடவும் இளைக்குமது
தேறிலுயி ருஞ்சிறக் குஞ்
சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலும் நல்லோர்
சிநேகமிப் படியாகு மே
வாமன சொரூபமத யானைமுக னுக்கிளைய
வாலகுரு பரவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தேய்வழி - தேயுமிடத்து. ஆம்பல் - அல்லி. புண்டரிகம் - தாமரை. போது - சூரியன். தேம் - தனக் கிடமாகிய. வாமன சொரூபம் - குறுகிய வடிவம். (48)

சைப்பலனும் அவை

பருவத்திலே பெற்ற சேயும் புரட்டாசி
பார்திசம் பாநடுகை யும்
பலமினிய ஆடிதனில் ஆனைவால் போலவே
பயிர்கொண்டு வரு கரும்பும்
கருணையொடு மிக்கநா யைமுளோர் கையினில்
கடன்இட்டு வைத்த முதலும்

காலமது நேரில் தனக்குறுதி யாகமுன்
கற்றுணர்ந் திடுகல்வி யும்
விருதரச ரைக்கண்டு பழகிய சிநேகமும்
விவேகிகட் குபகார மும்
வீண்அல்ல இவையெலாங் கைப்பலன தாகஅபி
விர்த்தியாய் வருமென்பர் காண்
மருஉலா வியநீப மாலையுந் தண்தாள
மாலையும் புனைமார்ப னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பருவம் - இளமைப்பருவம். சேய் - குழந்தை. நாணயம் - வாக்குத்தவறாமை. விருது - வெற்றி. தாளம் - முத்து. (49)

## சமயத்துக்கு உதவாதவை

கல்லாது புத்தகந் தனிலெழுதி வீட்டினில்
கட்டிவைத் திடுவித்தை யும்
காலங்க ளுக்குதவ வேண்டுமென் றன்னியன்
கையில் கொடுத்த பொருளும்
இல்லாளை நீங்கியே பிறர்பாரி சதமென்
றிருக்கின்ற குடிவாழ்க் கையும்
ஏறுமா றாகவே தேசாந் தரம்போய்
இருக்கின்ற பிள்ளை வாழ்வும்
சொல்லான தொன்றுமவர் மனமான தொன்றுமாச்
சொல்லுவஞ் சகர் நேசமும்
சுகியமா யுண்டென் றிருப்பதெல் லாந்தருண
துரிதத்தில் உதவாது காண்
வல்லான கொங்கைமட மாதுதெய் வானைகுற
வள்ளிபங் காள நேயா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பாரி - மனைவி. சதம் - கதி. ஏறுமாறாக - மனக்குழப்பமாக. தேசாந்தரம் - பரதேசம். சுகியம் - சுகித்தற் குரியவை. தருணம்- சமயம். வல் - சூதாடும் சொக்கட்டான் கருவி. (50)

## திரும்ப மாட்டாதவை

ஆடரவின் வாயினில் அகப்பட்ட தவளையும்
ஆனைவா யிற் கரும்பும்
அரிதான கப்பலில் பாய்மரக் காற்றினில்
அகப்பட்டு மெலி காக்கையும்
நாடறிய வேதாரை வார்த் துக் கொடுத்ததும்
நமன்கைக்கு ளான உயிரும்
நலமாக வேஅணை கடந்திட்ட வெள்ளமும்
நாய்வேட்டை பட்ட முசலும்
தேடியுண் பார்கைக்கு ளானபல உடைமையும்
தீவாதை யான மனையும்
திரள்கொடுங் கோலரசர் கைக்கேறு பொருளும்
திரும்பிவா ராவென்பர் காண்
மாடமிசை அன்னக் கொடித்திரள்கொள் சோணாடு
வாழவந் திடுமுதல் வனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தாரை - தத்தம் பண்ணுநீர். நமன் - எமன். மாடம்- மாளிகை. அன்னக்கொடி - அன்னதான மிடுவதற்கு அடையாளமாகக் கட்டி விட்ட கொடி. திரள் - கூட்டம். சோணாடு - சோழநாடு. (51)

## இதினுமிது நன்றென்பவை

கூடுகெடுத் தாயிரம் செய்குவதில் இன்சொலால்
களிகொண் டழைத்தல் நன்று

கனவேள்வி ஆயிரஞ் செய்வதில் பொய்யுரை
கருத்தொடு சொலாமை நன்று
வெடுவெடுக் கின்றதோர் அவிவேகி உறவினில்
விவேகியொடு பகைமை நன்று
வெகுமதிக ளாயிரஞ் செய்வதின் அரைக்காசு
வேளைகண் டுதவல் நன்று
சடுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை என்னல் நன்று
சம்பத் துடன்பிணியில் மெலிகுவதில் நோயற்ற
தாரித்தி ரியநன் று காண்
மடுவினில் கரிஓல மென்னவந் தருள்செய்த
மால்மருக னை முதல்வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சம்பத்து - மிக்க செல்வம். களி - சந்தோஷம். சடுதி - சீக்கிரம். தாரித்திரியம் - வறுமை. மடு - குளம். கரி - யானை. ஓலம் - அபயக்குரல். (52)

பல கூடினும் ஒன்றற்கு ஈடாகாதவை

தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடா குமோ
தாருவில் கொடிதொனிகள் பலகூடி னுமொரு
தம்பட்ட ஓசை ஆமோ
கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினொரு
குஞ்சரக் கன்றாகு மோ
கொட்டிமலர் வாவியில் பலகூடி னுமொரு
கோகனக மலராகு மோ
பாரமிகு மாமலைகள் பலகூடி னுமொரு
பைம்பொன்மக மேரு ஆமோ

பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும்விற்
பனவொருவ னுக்கு நிகரோ
வாரணக் கொடியொரு கரத்திற் பிடித்தொன்றில்
வடிவேல் அணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தாரகை - நட்சத்திரம். ஈடு - ஒப்பு, இணை. தம்பட்டம்-ஆனகம் என்னும் ஒருவகைப் பறை. கோரம்-கொடுமை. கோகனகம்-செந்தாமரை. வாரணம் - கோழி. கரம் - கை. கொடி - காகம். (53)

## அருமை யறிதல்

மணமாலை அருமையைப் புனைபவர்க ளேயறிவர்
மட்டிக் குரங் கறியுமோ
மக்களுடை அருமையைப் பெற்றவர்க ளேயறிவர்
மலடிதான் அறிவ துண்டோ
கணவருடை அருமையைக் கற்பான மாதறிவள்
கணிகையா னவள் அறிவளோ
கருதுமொரு சந்தியின் பாண்டமென் பதைவருங்
களவர்ன நாயறியு மோ
குணமான கிளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடியபூ னையும் அறியுமோ
குலவுபெரி யோரருமை நல்லோர்க ளேயறிவர்
கொடுமூடர் தாமறிவ ரோ
மணவாள நீயென்று குறவள்ளி பின்தொடர
வனமூடு தழுவும் அழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

புனைபவர் - சூடுகின்றவர். கணிகை - விலைமாது. சந்தி - விரதம். பாண்டம் - பாத்திரம். மணவாளன் - மணத்திற்குரிய நாயகன். வனமூடு - காட்டினிடையே. தழுவுதல் - அணைத்தல். (54)

## தீச்சார்பாற் பயன்படாதவை

மடுவினில் கஞ்சமலர் உண்டொருவர் அணுகாமல்
வன்முதலை அங்கிருக் கும்
மலையினில் தேனுண்டு சென்றொருவர் கிட்டாமல்
மருவியதில் வண்டிருக் கும்
நெடுமைதிகழ் தாழைமலர் உண்டொருவர் அணுகாமல்
நீங்காத முள்ளிருக் கும்
நீடுபல சந்தன விருக்ஷமுண் டணுகாது
நீளரவு சூழ்ந்திருக் கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினில் செல்லாது
குரைநாய்க ளங்கிருக் கும்
கொடுக்குந் தியாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி உண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவுமிரு கண்ணிகுற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

மல்கி - பெருகி. வடு - மாம்பிஞ்சு. கடு - நஞ்சு. பொருவும் - ஒத்திருக்கும். (55)

## கணிகையர் இழிவு

தேவதா சிகள்வீடு சந்தைப் பெரும்பேட்டை
சேர்ந்திடு படுக்கை வீடு
தெருவாசல் கட்டில்பொது அம்பலம் உடுத்ததுகில்
செய்யகூ தாடு சாலை
மேவலா கியகொங்கை கையாடு திரள்பந்து
விழிமனங் கவர்தூண்டி லாம்

மிக்கமொழி நீர்மே லெழுத்ததிக மோகமொரு
 மின்னலிரு தொடைசர்ப்ப மாம்
ஆவலா கியஅல்கு லோதண்டம் வாங்குமிடம்
 அதிகபட மாமனது கல்
அமிர்தவா யிதழ்சித்ர சாலையெச் சிற்குழி
 அவர்க்காசை வைக்க லாமோ
மாவடிவு கொண்டே ஒளித்தவொரு சூரனை
 வதைத்தவடி வேலா யுதா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே.

சந்தைப் பேட்டை - சந்தை கூடும் இடம். அம்பலம் - சபை. துகில் - ஆடை. மேவல் - விரும்பல். மோகம் - கற்பு. ஒரு - ஒப்பற்ற. சர்ப்பம் - பாம்பு. ஆவல் - ஆசை. தண்டம் - அபராதம். கபடம் - வஞ்சனை. மா - மாமரம். (56)

## கலிகாலக் கோமை

தாய்புத்தி சொன்னால் மறுத்திடுங் காலமுயர்
 தந்தையைச் சீறு காலஞ்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
 சற்றுமெண் ணாத காலம்
பேய்தெய்வ மென்றுப சரித்திடுங் காலம்
 புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலம்நற்
 பெரியர்சொல் கொளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
 சிறியவன் பெருகு காலம்
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்வசை
 செப்புவோர்க் குதவு காலம்

வாய்மதம் பேசிவிடும் அனியாய காரர்க்கு
வாய்த்தகலி காலம் ஐயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சீறுதல் - கோபித்தல். சற்றும் - சிறிதேனும். சிறுமை வறுமை. செரு - சண்டை வரிசை - வெகுமதி. (57)

## அவரவர்க்கு உரியவை

கல்வியொடு கனமுறச் சபையின்மேல் வட்டமாக்
காணவைப் போன் பிதாவாம்
கற்றுணர்ந்தே தனது புகழால் பிதாவைப்ர
காசஞ் செய்வோன் புத்திரன்
செல்வமிகு கணவனே தெய்வமென் றனுதினஞ்
சிந்தைசெய் பவள் மனைவியாம்
சிநேகிதன் போலவே அன்புவைத் துண்மைமொழி
செப்புமவ னேசோ தரன்
தொல்வளமிகுந்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
சொல்லுமவ னேகுரவ னும்
சொன்னநெறி தவறாமல் வழிபாடு செய்துவரு
தூயனே இனிய சீஷன்
வல்விரக மிஞ்சுசுர குஞ்சரி உடன்குறவர்
வஞ்சியை மணந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

மேல்வட்டம் - சிறப்பு. குரவன்-ஆசான். விரகம் - காமநோய். வஞ்சி - வஞ்சிக்கொடி போன்ற வள்ளியம்மை. (58)

## சிறுமையிற் பெருமை.

சேற்றில் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலிருக் குந்
திகழ்சிப்பி உடலில் சனித்தமுத் தரசரது
தேகத்தின் மேலிருக் கும்
போற்றியிடு பூச்சியின் வாயின்நூல் பட்டென்று
பூசைக்கு நேச மாகும்
புகலரிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதஅபி டேக மாகும்
சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க்கு மாம்
சாதியீ னத்தில் பிறக்கினுங் கற்றோர்கள்
சபையின்மேல் வட்டம் அன்றோ
மாற்றிச் சுரத்தினை விபூதியால் உடல்குளிர
வைத்தமெஞ் ஞான முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சேறு - சேதகம் சனித்தல் - பிறத்தல். புனிதம்-பரிசுத்தம். புலால் - ஊன். (59)

## செய்த் தகாதவை

தான்ஆ சரிதத்துவரு தெய்வமிது என்றுபொய்ச்
சத்தியஞ் செயில்வி டாது
தன்வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத் தாலது சுடும்
ஆனாலும் மேலவர்கள் மெத்தவுந தனதென்
றடாதுசெய்யிற் கெடுதி யாம்
ஆனைதான் மெத்தப் பழக்கமா னாலுஞ்செ
யாதுசெய் தாற்கொன் றிடும்

தீனை தினிதென்று மீதூண் விரும்பினால்
 தேகபீ டைகளே தரும்
செகராசர் சனுவென்ன ஏலாத காரியம்
 செய்தால் மனம்பொறார் காண்
வானாடு புகழுமொரு சோணாடு தழைய இவண்
 வந்தவ தரித்த முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே.

ஆசரித்தல் - வழிபடுதல். தீன் - உணவு. பீடை - துன்பம். சனு - சரசம். (60)

நடுவு நிலைமை

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
 வருமென்றும் நேச ரென்றும்
வன்பகைஞ ரென்றும்அய லோரென்றும் மிக்கதன
 வானென்றும் ஏழை யென்றும்
இந்தவகை யைக்குறித் தொருபக்ஷ பாதமோர்
 எள்ளள வுரைத் திடாமல்
எண்ணமுட னேலிகித புத்தியொடு சாக்ஷிக்கும்
 ஏற்கச்ச பாச மதமாம்
முந்தஇரு தலையுஞ் சமன்செய்த கோல்போல்
 மொழிந்திடில் தர்மமது காண்
முனைவீம னுடல்பாதி மிருகந் தனக்கென்று
 முன்தருமர் சொன்ன தலவோ
மைந்தனென அன்றுமை முலைப்பால் கொடுத்திட
 வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே.

பரிதானம் - விருப்பத்தை யுண்டாக்கும் தானம். பரிவு-அன்பு. இலிகிதம் - எழுத்து. சபா சமதம் - சபையிலுள்ளவர்கள் சம்மதி. முனைதல்-போர் செய்தல். கோல் - தராசுக்கோல். (61)

பக்ஷ பாதம்

ஓரவிவ காரமா வந்தவர் முகம்பார்த்
துரைப்போர் மலைக்குரங் காம்
உயர்வெள் ளெருக்குடன் முளைத்துவிடும் அவரில்லம்
உறையுமூர்பாழ் நத்த மாம்
தாரணியி லிவர்கள்கிளை நெல்லியிலை போலுகுஞ்
சமானமா எழுபிறப் புஞ்
சந்ததியி லாதுழல்வர் அவர்முகத் தினின்மூத்த
தையலே குடியி ருப்பாள்
பாரமிவ ரென்றுபுவி மங்கையும் நடுங்குவாள்
பழித்ததுர் மரண மாவார்
பகர்முடிவி லேரவுர வாதிநர கத்தனு
பவிப்பரெப் போது மென்பார
வாரமுடன் அருணகிரி நாதருக் கனுபூதி
வைத்தெழுதி யருள் குருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ஓரம் – ஒரு சார்பு. பாழ் - சூனியம். நத்தம் - ஊர். கிளை - சுற்றம். தையல் - பெண். மூத்த தையல் – மூதேவி. சந்ததி - கால்வழி. வாரம் - அன்பு. இரவுரம் ஆதி - இரௌரம் முதலிய (62)

ஒன்றிலாமையாற் சிறவாதவை

கொங்கையில் லாதவட் கெத்தனைப் பணியுடைமை
கூடினும் பெண்மை யில்லை
கூறுநிறை கல்வியில் லாமலெத் தனைகவிதை
கூறினும் புலமை யில்லை
சங்கையில் லாதவர்க் கெத்தனை விவேகந்
தரிக்கினுங் கனதை யில்லை

சட்சுவை பதார்த்தவகை உற்றாலும் நெய்யிலாச்
சாதமுந் திர்த்தி யில்லை
பங்கயம் இலாமலெத் தனைமலர்கள் வாவியில்
பாரித்தும் மேன்மை யில்லை
பத்தியில் லாமலெவகு நியமமாய் அர்ச்சனைகள்
பண்ணினும் பூசை யில்லை
மங்கையர் இலாமனைக் கெத்தனை அருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை யில்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பணி - ஆபரணம். கவிதை - பாட்டு, சங்கை - மதிப்பு. கனதை- மேன்மை. சட்சுவை - அறுசுவை. திருத்தி - திருப்தி. பாரித்தல் - பூத்தல். (63)

அளவு படாதவை

வாரிஆ ழத்தையும் புனலெறியும் அலைகளையும்
மானிடர்கள் சனனத்தை யும்
மன்னவர்கள் நினைவையும் புருஷர்போ கங்களையும்
வானின்உயர் நீளத்தை யும்
பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்னவரை யும்
பருப்பதத் தின்நிரையும ஈசரச் செயலையும்
பனிமாரி பொழிதுளியை யும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத்தை யும்
தெரிவையர்கள் சிந்தையையும் இவ்வள வெனும்படி
தெரிந்தள விடக்கூடு மோ

வாரிச மடந்தைகுடி கொண்டநெடு மாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

புனல் - நீர். படி - பூமி. பருப்பதம் - மலை. நிரை - ஒழுங்கு. தெரிவையர் - பெண்கள். வாரிசம் - தாமரை. வாரிச மடந்தை - இலக்குமி. (64)

## பிறர்மனை நயத்தல்

தந்தாரம் அன்றியே பரதார மேல்நினைவு
தனைவைத்த காமு கர்க்குத்
தயையில்லை நிசமில்லை வெட்கமில்லை சமரினில்
தைரியஞ் சற்று மில்லை
அந்தார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை
அறிவில்லை மரபு மில்லை
அறமில்லை நிதியில்லை இரவினில் தனிவழிக்
கச்சமோ மனதி லில்லை
நந்தாத சனமில்லை இனமில்லை எவருக்கும்
நட்பில்லை கனதை யில்லை
நயமில்லை இளமைதனில் வலிமையிலை முத்திபெறும்
ஞானமிலை என்பர் கண்டாய்
மந்தார பரிமள சுகந்தாதி புனையுமணி
மார்பனே அருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

அம் - அழகிய. தாரம் - மனைவி. நந்துதல்—கெடுதல். மந்தாரம் ஒருவகை மலர். பரிமளம் - வாசனை. மணி - அழகு. (65)

## மானம் விடாமை

கனபாரம் ஏறில் பிளந்திடுவ தன்றியே
கல்தூண் வளைந்தி டாது
கருதலர்க ளாலுடைந் தாலும்உயிர் அளவிலே
கனசூரன் அமரில் முறியான்
தினமோர் இடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதேர்ல்
சிவனள விற்கொ டாது
திரமான பெரியோர் சரீரங்கள் போகினுஞ்
செப்புமுறை தவிறி டார்கள்
வனமேறு கவரிமா உயிர்போகும் அளவுந்தன்
மயிரின்றொன் றுங்கொ டாது
வாராத ஆபதது வருகினுங் கற்புடைய
மாதுநிறை தவறி நடவாள்
மனதார உனதடைக் கலமென்ற கீரற்கு
வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கருதலர் - பகைவர். இடுக்கண் - துன்பம். கீரன் - நக்கீரதேவர். (66)

## திருவருட் சிறப்பு

திருமகள் கடாக்ஷமுண் டானால் எவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழி எல்லாம் பெரும்பாதை ஆய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொரு துரும்புமரி யாதையாஞ் செல்வமே
புகல்பெருக் காறு போலாம்
புவியின்முன் கண்டுமதி யாதபேர் பழகினவர்
போலவே நேசம் ஆவார்

பெருமையொடு சாதியில் உயர்ச்சிதரும் அனுதினம்
பேரும்பிர திஷ்டை உண்டாம்
பிரியமொடு பகையாளி கூடஉற வாகுவான்
பேச்சினில் பிழை வராது
வருமென நினைத்தபொருள் கைகூடி வரும்அதிக
வல்லமைகள் மிகவும் உண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

கடாக்ஷம் - கடைக்கண் பார்வை. பெருக்கு - வெள்ளம். பிரதிஷ்டை - கீர்த்தி. (67)

நட்பு நிலை

கதிரவன் உதிப்பதெங் கேநளினம் எங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேகம் எங்கே பசுந்தோகை எங்கே
கருத்தில்நட் பான தென்ன
மதியம்எங் கேபெருங் குமுதம்எங் கேமுக
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன
வல்இரவு விடிவதெங் கேகோழி எங்கே
மகிழ்ந்துகூ விடுதல் என்ன
நிதியரசர் எங்கே இருந்தாலும் அவர்களொடு
நேசமொன் றாயி ருக்கும்
நீதிமிகு நல்லோர்கள் எங்கிருந் தாலும்அவர்
நிறைபக்ஷம் மறவார்கள் காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவு சோணாட் டதிபனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

நளினம் - தாமரை. கார்-கரிய. தோகை-மயில். புடை - பக்கம். அதிபன் - தலைவன். (68)

## காலம் அறிதல்

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
கனகமுடி அரசர் தாமுங்
கருதுசய காலமது கண்டந்த வேளையில்
காரிய முடித்து விடுவார்
மேகமுங் கார்காலம் அதுகண்டு பயிர்விளைய
மென்மேலு மாரி பொழியும்
மிக்கான அறிவுளோர் வருதருண காலத்தில்
மிடியாள ருக்குதவு வார்
நாகரிகம் உறுகுயில் வசந்தகா லத்திலே
நலமென் றுகந்து கூவும்
நல்லோர் குறித்ததைப் பதறாமல் அந்தந்த
நாளையில முடிப்பர் கண்டாய்
வாகனைய காலைகல் மாலைபுல் எனும்உலக
வாடிக்கை நிசம் அல்லவோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கூகை - கோட்டான். நாகரிகம் - விநோதம். வசந்த காலம்- இளவேனிற்காலம். உவந்து-களித்து. வாகு - ஒழுங்கு. (69)

## இடன் அறிதல்

தரையதனில் ஓடுதேர் நீள்கடலில் ஓடுமோ
சலதிமிசை ஓடு கப்பல்
தரைமீதில ஓடுமோ தண்ணீரில் உறுமுதலை
தனமுனே கரி நிற்குமோ
விரைமலர் முடிப்பரமர் வேணி அரவினைவெல்ல
மிகுகருட னாலா குமோ

வேங்கைகள் இருக்கின்ற காடுதனில் அஞ்சாமல்
வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை அண்டிவாழ் வோர்தமைத்
துஷ்டர்பகை என்ன செய்யும்
துணைகண்டு சேரிடம் அறிந்துசேர் என்றௌவை
சொன்னகதை பொய் யல்லவே
வரைஊது மாயனை அடுத்தலால் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சலதி - கடல். கரி - யானை. விரை - வாசனை. வேணி - சடை. வரை - மூங்கில். பஞ்சவர் - ஐவர் பாண்டவர் (70)

யாக்கை நிலையாமை

மனுநல்மாந் தாதர்முன் ஆனவர்கள் எல்லாரும்
மண்மேல் இருந்து வாழ்ந்து
மடியா திருந்தபேர் இல்லைஅவர் தேடியதை
வாரிவைத் தவரு மில்லை
பனியதனை நம்பியே ஏர்பூட்டு கதையெனப்
பாழான உடலை நம்பிப
பார்மீதில் இன்னம்வெகு நாளிருப் போம்என்று
பல்கோடி நினைவை எண்ணி
அனிதமாய் விருதாவில் மாய்வதே அல்லாமல்
அன்பாக நின்பதத் தை
அர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென் றெண்ணார்கள்
ஆசைவலை யிற்சுழலு வார்
வனிதையர்கள் காம விகாரமே பகையாகும்
மற்றுமொரு பகைமை உண்டோ

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

மாந்தாதா - மாந்தாதா என்னும் ஓர் அரசன். மடிதல் - இறத்தல். அனிதம்-அனியாயம். விருதா - வீணிலே. வனிதையர் - பெண்கள். மாய்தல் - இறத்தல். (71)

வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகந் தன்னிலே மருகன்வந் திடும்அளவில்
மேன்மேலும் உபசரித்து
விருந்துகள் சமைத்துநெய் பால்தயிர் பதார்த்தவகை
வேண்டுவ எலாம் அமைப்பார்
ஊட்டமிரு வர்க்கவகை செய்திடுவார் தைலமிட்
டுறுதியாய் முழுகுவிப பார்
ஓயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவர்
உற்றநாள் நாலாகி லோ
நாட்டம்ஒரு படிஇறங் குவதுபோல் மரியாதை
நாளுக்குநாள் குறைவு றும்
நகைசெய்வர் மைத்துனர்கள அலுவல்பார் போஎன்று
நாணமல் மாமி சொல்வாள்
வாட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பள்அவன்
மட்டியினும் மட்டி அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

மருகன் - மருமகன். ஊட்டம் - சிற்றுண்டி. தைலம் - எண்ணெய். ஓயாது - இடைவிடாது. அலுவல் - வேலை. (72)

செல்வம் நிலையாமை

ஓடமிடும் இடமது மணல்சுடுஞ் சுடுமிடமும்
ஓடமிக வேநடக் கும்

உற்றதோர் ஆற்றின்மடு மேடாகும் மேடெலாம்
உறுபுனல்கொள் மடுவா யிடும்
நாடுகா டாகும்உயர் காடுநா டாகிவிடும்
நவில்சகடு மேல்கீழ தாய்
நடையுறுஞ் சந்தைபல கூடும்உட னேகலையும்
நல்நிலவும் இருளாய் விடும்
நீடுபகல் போயபின் பிரவாகும் இரவுபோய்
நிறைபகல் போதாய் விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனை பாரிசனம் மக்கள்நிதி பூஷணமு
மருவுகன வாகும் அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

சகடு - வண்டிச் சக்கரம் நிலவு - சந்திரிகை. பாரி - மனைவி.

(73)

பிறந்தாற் பெறுபேறு

சடமொன் றெடுத்தால் புவிக்குநல் லவனென்று
தன்பேர் விளங்க வேண்டும்
சதிருடன் இல்லாது மெஞ்ஞானி என்றவ
தரிக்கவே வேண்டும் அல்லால்
திடம்இனிய ரணசூர வீரனிவன் என்னவே
திசைமெச்ச வேண்டும் அல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் னாமலே
செய்யவே வேண்டும் அல்லால்
அடைவுடன் பலகல்வி ஆராய்ந்து வித்துவான்
ஆகவே வேண்டும் அல்லால்

அறிவால் துரைமக்கள் ஆகவர வேண்டும் இவர்
அதிகபூ பாலர் ஐயா
வடகுவடு கிடுகிடென எழுகடலும் அலையெறிய
மணிஉரகன் முடிகள் நெரிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சடம்-உடம்பு. அவதரித்தல் - பிறத்தல். திசை- திக்கு. துரை-சீமான். பூபாலர் - பூமியைப் பாலிப்பவர் உரகன் - ஆதிசேடன். (74)

## வேசை நிந்தை

தேடித்தம் வீட்டில் பணக்காரர் வந்திடில்
தேகசீ வன்போல வே
சிநேகித்த உம்மையொரு பொழுதுகா ணாவிடில்
செல்லுமோ அன்னம் என்றே
கூடிச் சுகிப்பரென் ஆசையுன் மேலென்று
கூசாமல் ஆணை இடுவார்
கொங்கையை வெடிக்கப் பிடிக்கக் கொடுத்திதழ்
கொடுப்பர்சும் பனம் உகப்பர்
வேடிக்கை பேசியே கை முதல் பறித்தபின்
வேறுபட நிந்தை செய்து
விடவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
விட்டுத் துரத்தி விடுவார்
வாடிக்கை யாய்இந்த வண்டப் பரத்தையர்
மயக்கதனை நம்ப லாமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சீவன் - உயிர் அன்னம் - சோறு. சுகித்தல் - இன்பம் அனுபவித்தல். கூசுதல் - நாணுதல் சும்பனம் - சுவைத்தல். வாடிக்கை - வழக்கம். (75)

## இதற்கு இது உறுதியெனல்

கைக்குறுதி வேல்வில் மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருளடக் கம்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடில் சத்ய வசனம்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க் குறுதி தேடல்
வீரருக் குறுதிபெண் மூபபினுக் குறுதிஉலன்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீர்அருமை பார்க்குறுதி செங்கோல்
செழும்படைக் குறுதி வேழம்
செல்வந் தனக்குறுதி பிள்ளைகள் நகர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்ச னர்களாம்
மைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கைமரு வுந்தலைவ னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

முன்பின் - முன் பிறந்தவனும் பின் பிறந்தவனும். வேசை - பரத்தை செய் - கழனி பார்- பூமி படை-சேனை வேழம்-யானை. மை - அஞ்சனம் (76)

## வறுமையிற் சிறுமை

வறுமைதான் வந்திடில் தாய்பழுது சொல்லுவாள்
மனையாட்டி சற்றும் எண்ணாள்
வாக்கில் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே அல்லாது
சிந்தையில் தைரிய மில்லை

செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாம்
செல்வரைக் காணில் நாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரில்
உயிருடன் செத்த பிணமாம்
உலகம் பழித்திடும் பெருமையோர் முன்புசென்
றொருவரோடு செய்தி சொன்னால்
மறுவசன முஞ்சொலார் துன்பினில் துன்பம்இது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சிறுமை - தாழ்வு செய்ய - செம்மையாகிய. (77)

## தீச்சார்பால் நன்மை இழப்பு

ஆனைதண் ணீரில்நிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி உலவும்
ஆயிரம் பேர்கூடி வீடுகட் டிடில்ஏதம்
அறைகுறளு முடனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போஜனஞ் செயுமளவில்
ஈக்கிடந் திசைகெட டாம்
இன்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோன் அதுதடுக் கும்
சேனைமன் னவரொன்ன கருமநிய மிக்கினுஞ்
சிறியோர்க ளால் குறைபடுஞ்
சிங்கத்தை யும்பெரிய ரிஷபத்தை யும்பகைமை
செய்தவொரு நரியல்ல வோ
மானையுந் திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே அருளா ளனே

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ஏதம் - குற்றம். அறைதல்-சொல்லுதல் குறள்.கோள் சொல் பவன். கோன்- இடையன். ரிஷபம் - எருது. (78)

## இடையூறுற்றும் பயன்படுபவை

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலும் ஊற்றுநீர்
அமுதபா னங்கொடுக் கும்
ஆதவனை ஒருபாதி கட்செவி மறைத்தாலும்
அப்போதும் உதவி செய்வன்
கூறுமதி தேய்பிறைய தாகவே குறையினுங்
குவலயத் திருள்சி தைக்கும
கொல்லைதான் சாவிபோய் விட்டாலும் அங்குவரு
குருவிக்கு மேய்ச்சல் உண்டு
வீறுடன் உதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருப வர்க்கு
வேறுவகை இல்லையென் றுரையா தியன்றன
வியந்துள மகிழ்ந்து தவுவான்
மாறுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவேல் அணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ஆதவன் - சூரியன் கட்செவி - பாம்பு (கண்ணைச் செவியாக வுடையது) குவலயம் - பூமி சிதைக்கும் கெடுக்கும் கொல்லை- தோட்டம். இங்கு தோட்டப்பயிர். சாவி-பதர். உதாரி - உதாரகுண முடையவன். (79)

## இன்னவர்க்கு இது இல்லையெனல்

சார்பிலா தவருக்கு நிலையேது முதலிலா
தவருக் கிலாபம் ஏது
தயைஇலா தவர்தமக் குறவேது பணமிலா
தார்க்கேது வேசை உறவு
ஊர்இலா தவர்தமக் கரசேது பசிவேளை
உண்டிடார்க் குறுதி நிலையேது
உண்மையில் லாதவர்க் கறம்ஏது முயல்விலார்க்
குறுவதொரு செல்வம் ஏது
சோர்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
சுகமிலார்க் காசை ஏது
துர்க்குணம் இலாதவருக் கெதிராளி யேதுஇடர்செய்
துஷ்டர்க் கிரக்கம் ஏது
மார்புருவ வாலிமேல் அஸ்திரம் விடுத்தநெடு
மால்மருக ஞன முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சார்பு-துணை. முயல்வு- முயற்சி. எதிராளி - விரோதி. மார்பு - நெஞ்சம். அஸ்திரம் - அம்பு. (80)

## இதினும் இது நன்றெனல்

பஞ்சரித் தருமையறி யார்பொருளை எய்தலில்
பலர்மனைப் பிச்சை நன்று
பரிவாக உபசாரம் இல்லா விருந்தினில்
பட்டினி இருக்கை நன்று
தஞ்சமொரு முயலைஅடு வென்றிதனில் யானையொடு
சமர்செய்து தோற்றல் நன்று

சரசகுணம் இல்லாத பெண்களைச் சேர்தலிற்
சன்னியா சித்தல் நன்று
அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதனில்
அரவினொடு பழகுவது நன்று
அந்தணர்க் காபத்தில் உதவா திருப்பதனில்
ஆருயிர் விடுத்தல் நன்று
வஞ்சகர் உடன்கூடி வாழ்தலில் தனியே
வருந்திடுஞ சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

பஞ்சரித்தல் - கெஞ்சிக் கேட்டல். எய்தல் - அடைதல். தஞ்சம் -தாழ்வு. அடுதல் - போர் செய்தல் அஞ்சலார் - பகைவர். (81)

நிலையாதவை

கொற்றவர்கள் சாணுவமும் ஆறுநேர் ஆகிய
குளங்களும் தாசி உறவுங்
குணம்இலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
குலவுநீர் விளையா டலும்
பற்றலார் தமதிடை வருந்துவிசு வாசமும்
பழையதா யாதி நிணறும்
பரதார மாதரது போகமும் பெருகிவரு
பாங்கான ஆற்று வரவும்
நத்துமொரு துர்ப்புத்தி கேட்கின்ற பேருறவும்
நல்லமத யானை நட்பும்
நாவில்நல் லுறவுமொரு நாள்போல் இராதிவைகள்
நம்பப் படாது கண்டாய்
மற்றும்ஒரு துணை இல்லை நீதுணைஎ னப்பரவும்
வானவர்கள் சிறைமீட்ட வா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

ராணுவம் - படை. குலவு - விளங்குகின்ற. பற்று அலார் - அன்பில்லாதவர். நத்துதல் - விரும்புதல் நிணறு - மன உருக்கம். நாவி - ஊமத்தை (82)

நற்புலவர் தீப்புலவர் செயல்

மிக்கான சோலையில் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்கள் எக்கனி இருந்தாலும்
வேப்பங் கனிக்கு நாடும
எக்காலும் வரிவண்டு பங்கேரு கத்தினில்
இருக்கின்ற தேனை நாடும்
எத்தனை சுகந்தவகை உற்றாலும் உருள்வண்
டினந்துர் மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவை நயங்கள்எங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கண்ணர் குற்றமெங் கேஎன்று
தமிழில் ஆராய்வர் கண்டாய்
மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

மிடை - நெருங்கிய. பங்கேருகம் - தாமரை. சுகந்தம் - நல்ல வாசனை. வன்கண்ணர் - கொடியர் காவி - கருங்குவளை. (83)

## தாழ்தற் பெருமை

வேங்கைகள் பதுங்குதலும் மாமுகில் ஒதுங்குதலும்
விரிசிலை குனிந் திடுதலும்
மேடம தகன்றிடலும் யானைகள் ஒடுங்குதலும்
வெள்விடைகள் துள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலும் மேலவர் இணங்குதலும்
முனிவர்கள் நயந்து கொளலும்
முதிர்படை ஒதுங்குதலும் வினையர்கள் அடங்குதலும்
முதலினர் பயந் திடுதலும்
ஆம்காவு சாய்குதலும் மகிழ்மலர் உலர்ந்திடலும்
ஆயர்குழல் சூடு படலும்
அம்புவியில் இவைகாரி யங்களுக் கல்லாமல்
அதனால் இளைப்பு வருமோ
மாங்கனிக் காஅரனை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

வேங்கை - புலி. முகில் - மேகம். சிலை - வில். மேடம் - ஆடு. விடை - எருது. மதகரி - பிள்ளையார் காவு - முதலை. சாய்தல் - தலை சாய்ந்திருத்தல். மகிழ் - மகிழமரம். குழல் - புள்ளாங்குழல். (84)

## தெய்வச் செயல்

சோடாய் மரத்தில் புறுவொண் டிருந்திடத்
துறவுகண் டேவே டுவன்
தோலாமல் அவையெய்ய வேண்டுமென் றொருகணை
தொடுத்துவில் வாங்கி நிற்க
ஊடாடி மேலே எழும்பிடில் அடிப்பதற்
குலவுரா சாளி கூட

உயரப் பறந்துகொண் டேதிரிய அப்போது
உதைத்தசிலை வேடன் அடியில்
சேடாக வல்விடந் தீண்டவே அவன்விழச்
சிலையில் தொடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ அவ்விரு
சிறைப்புறு வாழ்ந்த அன்றோ
வாடாமல் இவையெலாம் சிவன்செயல்கள் அல்லாதுன்
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

துறவு - நெருக்கம். கணை - அம்பு வாங்குதல் - வளைத்தல். உதைத்த அடி - மிதித்த பாதம். சேடு - மிகுதி வாளி - அம்பு.(85)

## பாடல் இயல்பு

எழுத்தசைகள் சீர்தளைகள் அடிதொடைகள் சிதையா
திருக்கவே வேண்டும் அப்பா
ஈரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமைய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொருள்
அடக்கமு மிருக்க வேண்டும்
அன்பான பாவினம் இசைந்துவரல் வேண்டும்முன்
அலங்காரம் உற்ற துறையில்
பழுத்துளம் உவந்தோசை உற்றுவரல் வேண்டும்
படிக்கும்இசை கூடல் வேண்டும்
பாங்காக இன்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்
மழுத்தினஞ் செங்கைதனில் வைத்தகங் காளன்அருள்
மைந்தனென வந்த முருகா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சிதைதல்-கெடுதல். மதுரம் - இனிமை. கவிதை - கவி. கங்காளன் - தசை நீங்கிய எலும்பு. (86)

## விபூதி வாங்கும் முறைமை

பரிதனில் இருந்தும்இயல் சிவிகையில் இருந்தும்உயர்
பலகையில் இருந்தும் மிகவே
பாங்கான அம்பலந் தனிலே இருந்தும்
பருத்ததிண் ணையிலி ருந்தும்
தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேலநின்று
திருநீறு வாங்கி இடினுஞ்
செங்கையொன் றாலும்விரல் மூன்றாலும் வாங்கினுந்
திகழ்தம் பலத்தி னோடும்
அரியதொரு பாதையில் நடக்கின்ற போதிலும்
அசுத்தநில மான அதிலும்
அங்கே தரிக்கினுந் தந்திடில் தள்ளினும்
அவர்க்குநர கென்பர் கண்டாய்
வரிவிழி மடந்தைகுற வள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சகநா தனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தெரிவு-தெரிதல். தம்பலம்- மெல்லப்பட்ட வெற்றிலை பாக்கு. வரி- செவ்வரி. (87)

## விபூதி தரிக்கும் முறைமை

பத்தியொடு சிவசிவா என்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெ டுத்துப்

பாரினில் விழாதபடி அண்ணாந்து செவியொடு
 பருத்தபுய மீது ஒழுக
நித்தமும் விரல்களால் நெற்றியில் அழுந்தவுற
 நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமாம்
 நீங்காமல் நிமலன் அங்கே
சத்தியொடு நித்தமவிளை யாடுவன் முகத்திலே
 தாண்டவஞ் செய்யுந் திரு
சஞ்சலம் வராதுபர கதியுதவும் இவரையே
 சத்தியுஞ் சிவனென்ன லாம்
மத்தினிய மேருவென வைத்தமு தினைக்கடையு
 மால்மருக ஞான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே.

பரிந்து-விரும்பி. புயம்-தோள். நிமலன்-பரமசிவன். பரகதி-மேலானநிலை. (88)

இவ் உறுப்பால் பயன்இல்லெனல்

தேவால யஞ்சுற் றிடாதகால் என்னகால்
 தெரிசியாக் கண்என்ன கண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
 சிந்தைதான் என்ன சிந்தை
மேவாக மஞ்சிவ புராணம் அவை கேளாமல்
 விட்டசெவி என்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னிஎன் சென்னிபணி
 விடைசெயாக் கைஎன்ன கை
நாவார நினையேத் திடாதவாய் என்னவாய்
 நல்தீர்த்த மூழ்கா உடல்

நானிலத் தென்னஉடல் பாவியா கியசனனம்
நண்ணினல் பலனேது காண்
மாஆகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

தெரிசித்தல்-காணுதல். விமலன்- சிவபிரான். நண்ணுதல்-அடைதல். மா-மாமரம். வேலை-கடல். (89)

## நற்பொருளோடு தீப்பொருள் பிறத்தல்

கோகன மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவும்ஆட் டின்கண் அதர்தான்
கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி உற்றும் என்ன
மாகர்உணும் அமுதினொடு நஞ்சம் பிறந்தென்ன
வல்லிரும் பில்துருத் தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனில்மொக்கு
வளமொடு பிறந்தென்ன உண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பண்ணுமொரு தாய் வயிற்றில்
பண்புறு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேதும் இல்லை யன்றோ
மாகனக மேருவைச் சிலைஎன வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

கோகனகம்-தாமரை. கோகனகமங்கை-இலக்குமி. மூத்தவள்-மூதேவி. மாகர்-தேவர். மொக்கு-கணு. அதர்-குறுமணல். (90)

## தன் இனத்தால் அழிவு

குலமான சம்மட்டி குறடுகைக் குதவியாய்க்
கூரிரும் புகளை வெல்லும்
கோடாலி தன்னுளே மரமது நுழைந்துதன்
கோத்திரம் எலாம் அழிக்கும்
நலமான பார்வைசேர் குருவியா னதுவந்து
நண்ணுபற வைகளை ஆர்க்கும்
நட்புடன் வளர்ந்தகலை மானொன்று சென்றுதன்
நவில்சாதி தனையி ழுக்கும்
உலவுநல் குடிதனில் கோளர்கள் இருந்துகொண்
டுற்றுரை ஈட ழிப்பர்
உளவனில் லாமலூர் அழியா தெனச்சொல்லும்
உலகமொழி நிசம் அல்லவோ
வலமாக வந்தா னிடத்தினிற் கனிகொண்ட
மதயானை தன்சோ தரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயலநீடு
மலைமேவு குமரேச னே.

சம்மட்டி - கூடம். குறடு - பற்றுக்கோடு. ஆர்க்கும்- (கண்ணியில்) கட்டுப்படுத்தும். கோளர் - பொய்யர். உளவன் - உளவு சொல்லுபவன். (91)

## வீணுக்கு உழைத்தல்

குயின்முட்டை தனதென்று காக்கைஅடை காக்குங்
குணமபோலும் ஈக்கள எல்லாங்
கூடியே தாம்உண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும
பயில்சோர ருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றுட்கருதி யே

பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே ஒருவர்பால்
தொட்டுத் தெரித்தி டாமல்
தொகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டு போகவரு
சொந்தமா னவர்வேறு காண்
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

நறவு - தேன். சோரர் - கள்ள நாயகர் துயில் - உறக்கம். தெரித்தல் - பகிர்ந்து கொடுத்தல். வயிரம் - கோபம் (92)

## இது சேரின் இது பயன்படாது எனல்

அழலுக்கு ளேவிட்ட நெய்யும் பெருக்கான
ஆற்றிற் கரைத்த புளியும்
அரிதான கமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரும்
அலைகைகட் கிடு பூசையும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிநறும் பனிநீரும் நீள்
சொல்லரிய காட்டுக் கெரித்தநில வுமகடல்
சுழிக்குளே விடு கப்பலும்
விழலுக் கிறைத்திட்ட தண்ணீரும் முகமாய
வேசைக் களித்த பொருளும்
வீணருக் கேசெய்த நன்றியும் பலனில்லை
விருதாவி தென்பர் கண்டாய்
மழலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

அழல் - நெருப்பு. கமர் - வெடிப்பு. அலகை - பேய். விழல்-ஒருவகைப்புல் மழலை - குதலைச் சொல் (93)

## கைவிடத் தகாதவர்

அன்னைசு ற றங்களையும் அற்றைநாள் முதலா
அடுத்துவரு பழைமையா ரையும
அடுபகைவ ரிற்தப்பி வந்தொரு வேந்தனையும்
அன்பான பெரியோ ரையும்
தன்னைநம் பினரையும் ஏழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர்தம் மையும்
தருணம்இது என்றுநல் லாபத்து வேளையில்
சரணம் புகுந்தோ ரையும
நன்னயம தாகமுன் உதவிசெய் தோரையும்
நாளுந் தனக்குறுதி யாய்
நத்துசே வகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிடல் ஆகாது காண்
மன்அயிலும் இனியசெஞ் சேவலுஞ் செங்கைமலர்
வைததசர வணபூ பனே
மயிலேறி விளையாடு குகனேபுல வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

அடுதல் - போர் செய்தல், நத்துதல் - விரும்புதல். நழுவுதல்-விலகிப்போதல். அயில் - வேல். (94)

## தகாத செயல்

அண்டிவரும் உற்றார் பசித்தங் கிருக்கவே
அன்னியர்க் குதவு வோரும்

ஆசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்பின்
அற்பரை அடுத்த பேரும்
கொண்டஒரு மனையாள் இருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோரும்
கூறுசற் பாத்திரம் இருக்கமிகு தானமது
குணம்இலார்க் கீய்ந்த பேரும்
கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேரும்
கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்
வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே அருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

(95)

நல்லோர் முறை

கூடியே சோதரர்கள் வாழ்தலா லும்தகு
குழந்தைபல பெறுத லாலும்
குணமாக வேபிச்சை இட்டுண்கை யாலும்
கொளும்பிதிர்க் கிடுத லாலும்
தேடியே தெய்வங்க ளுக்கீத லாலும்
தியாகங் கொடுத்த லாலும்
சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்த லாலும்
நாடியே தாழ்வாய் வணங்கிடுத லாலுமிக
நல்வார்த்தை சொல்ல லாலும்
நன்மையே தருமலால் தாழ்ச்சிகள் வாராஇவை
நல்லோர்கள் செயுமுறைமை காண்

வாடிமன நொந்துதமிழ் சொன்னநக் கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

(96)

## அடைக்கலங் காத்தல்

அஞ்சலெனு நாயினுடல் தருமன் சுமந்துமுன்
ஆற்றைக் கடத்து வித்தான்
அடைக்கலம் எனுங்கயற் காகநெடு மாலுடன்
அருச்சுனன் சமர் புரிந்தான்
தஞ்சமென வந்திடு புறவுக்கு முன்சிபி
சரீரந் தனைக்கொ டுத்தான்
தடமலைச் சிறகரிந் தவனைமுன் காக்கத்
ததீசிமுது கென்பளித் தான்
இன்சொலுட னேபூத தயவுடையர் ஆயினோர்
எவருக்கும் ஆபத்தி லே
இனியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
திரங்கி ரக்ஷிப்பர் அன்றோ
வஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
வளர்சூரன் உடல் கீண்டவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

(97)

## யோக்கியா யோக்கியம்

பாலினொடு தேன்வந்து சேரில்ருசி அதிகமாம்
பருகுநீர் சேரில் என்னும்
பவளத்தின் இடைமுத்தை வைத்திடில் சோபிதம்
படிகமணி கோக்கில் என்னும்

மேலினிய மன்னர்பால் யானைசேர் வதுகனதை
மேஷமது சேரில் என்னும்
மிக்கான தங்கத்தில் நவமணி உற்றபெருமை
வெண்கல் அழுத்தில் என்னும்
வாலிப மின்னார்களுடன் இளையோர்கள் சேரில்நலம்
வளைகிழவர் சேரில் என்னும
மருவுநல் லோரிடம பெரியோர் வரில்பிரியம்
வருகயவர் சேரில் என்னும்
மாலிகை தரித்தமணி மார்பனே தெய்வானை
வள்ளிக்கு வாய்த்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

சோபிதம் - அழகு. மின்னார் - பெண்கள். (98)

## பெரியோர் இயல்பு

அன்னதா னஞ்செய்தல் பெரியோர்சொல் வழிநிற்றல்
ஆபத்தில் வந்த பேருக்கு
அபயங் கொடுத்திடுதல் நல்லினஞ் சேர்ந்திடுதல்
ஆரியன் வழி நின்று அவன்
சொன்னமொழி தவறாது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி அருச்சனை செயல்
சோம்பலில் லாமல்உயிர் போகினும வாய்மைமொழி
தொல்புவியில் நாட்டி இடுதல்
மன்னரைச் சேர்ந்தொழுகல் கற்புடைய மனைவியொடு
வைகினுந் தாமரை இலை
மருவுநீர் எனவுறுதல் இவையெலாம் மேலவர்தம்
மாண்பென் றுரைப்பர் அன்றோ

வன்மயில் மேலிவர்ந் திவ்வுலகை ஒருநொடியில்
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

(99)

நூற் பயன்

வன்னமயில் ஏறிவரு வேலா யுதக்கடவுள்
மலைமேல் உகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமரம் ஆகினோன்
வானவர்கள் சேனை பதி
கன்னமொழி உமையாள் திருப்புதல்வன் அரன்மகன்
கங்கைபெற றருள் புத்திரன்
கணபதிக் கிளையஒரு மெஞ்ஞான தேசிகக்
கடவுள்ஆ விநன்குடியி னன்
பன்னரிய புல்வயலில் வாழ்குமரேசர்மேல்
பரிந்துகுரு பாத தாசன்
பாங்கான தமிழாசி ரியவிருத் தத்தின்அறை
பாடலொரு நூறு நாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்ற பேர்கள்
ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத்தி யும்பெறுவ ரே.

குமரேச சதகம்

(100)

முற்றிற்று

---

## குமரேச சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப் பகராதி



செய்யுள் முதற்குறிப் பகராதி

முற்றிற்று.

---